[illegible]

குன்றைக்குடி.

# மயூரகிரிநாதர்

# பிள்ளைத்தமிழ்.

மழவைராயனேந்தல்

சுப்பிரமணிய பாரதியார்

இயற்றியது.

---

இஃது

இராமநாதபுரம் ஜில்லா

அஞ்சுகோவில் தேவஸ்தானம் டிரஸ்டி

மகா-ா-ா-ஸ்ரீ ராவ்பகதூர்

எம். ஆர். கோவிந்தராயரவர்கள்

உத்திரவுப்படி

மஹாலெக்ஷுமி விலாசம் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

மதுரை.

1924.

# சிறப்புப்பாயிரம்.

---

## மதுரைத் திருவிளையாடற் கீர்த்தனை செய்த
## மழவைச் சுப்பிரமணிய ஐயர் இயற்றியது.

---

### நிலமண்டிலவாசிரியப்பா.

பூமகள் நாமகள் பொன்மகள் கன்மகள்
ஆமிவர் தவத்தா லாதியங்கடவுள்
தண்சுமந் திலங்கு சசிநதிமுடிமேல்
மண்சுமந் தித்தரை மகளையுயர்த்தியும்
எண்ணூறு புலவரோ டையந்தேழுவராய்த்
தண்ணவெண்சலசை சாபமொழித்தும்
பார்வதியிறையாய்ப் பலியேற்பொழித்துப்
பார்வதியிறையாய்ப் பைம்பொனீந்தளாவியும்
கருவுயிர்த்தறியாக் கௌரியங்கயற்கண்
ணரிவையுக்கிரனையீன் றன்புறத்தழுவியும்
இலீலைகளெட்டெட் டிவையொடுகூடலின்
மேனுறநடாத்தி மேலோர்வியப்ப

எந்நாட்டினுமுயர்ந் தின்பம்பயக்குந்
தென்னாட்டினமகள் சிறுமியாகும்
சோமநாட்டின் னேரிழைதிலக
மாமெனநிலவு மணிதிகழ்வளநகர்
பண்டருந்தவரொடு பங்கயனரண
னண்டருங்குழாங்கொண் டறுமுகவேளை
வேண்டியேகந்த வெற்பினைச்சூழ்ந்து
நீண்டகைகுவித்து நின்றபோழ்தாங்கு
எவருநர்தியுமே யிரைந்திடவிழுங்கிச்
சிவசுதன்சினவச் சிவனேடுமிழ்ந்த
மயிலைச்சிலைவடி வாகெனப்பணிக்க
அயில்வேற்கடவு ளருளாலீங்குற்
றோங்கியசாப மொழிந்துபண்டுருவந்
தாங்கியசிகண்டிச் சைலமீதுற்றுக்
குன்றக்குடியெனக் குவலயம்புகழ
நின்றற்புதமண் ணிலமதுதுலங்க
மறையைச்சுவத்த வனமாய்த்தவமுற
நிறைமுனிவோர்பொன் னிலத்தர்நின்றேத்த
நாரதமுனிக்கு ஞானோபதேசங்
கூரயிற்கடவுள் கூறியமகாதலங்

கருகியநீல கந்தரனகமகிழ்ந்
    தருள்செயச்சரவணத் தன்பினமர்ந்து
கார்த்திகைமாதர் கரமலர்மேற்கொண்
    டேத்தவளாமுலை யின்பாற்சுவையுற்
றாறுருவாயங்கே கோபித்து
    பீறுமயனை விலங்குறவகற்றிக்
குறிஞ்சியின்வள்ளிக் கொடியடிவீழ்ந்து
    நறுஞ்செழுமுல்லை நகையுறுமண்டர்
மாதனைமங்கல மருவச்செய்து
    வாதரமாய்வந் தன்புறும்பாலைக்
கிழத்தியாமன்னை கேண்மைவிரும்பிப்
    பழகாப்பார்வையின் படர்ந்துபொலிந்த
மருதத்தலைவனை மாட்சிமையாக்கிப்
    பொருதடவம்புயம் பூரித்தோங்க
வெரியந்தாரணி விளங்கமேவி
    நீரமைநெய்தன் முந்நீரெதிர்த்துக்
குழகனோர்மறைப்பொருள் கூறுமின்ப
    மொழியாமதுர முதுசுவைப்பானதி
தேனதியென்னத் தென்பால்வடபால்
    ஆனதிமையவ ரமராவதியு

மளகையுமேத்தவ மருமிப்பதிவரை
வளரொளிதழையும் வடிவேலவர்மேல்
தேசுங்கல்வியுஞ் செல்வமுமுயர்ந்த
ராஜகெம்பீர நவில்பிரகசரணன்
போதில்வானவனைப் பொருமறையுணர்ந்த
கோதில்வாதூல கோத்திரோத்பவன்மா
வாபஸ்தம்ப சூத்திரனன்பிற்
ருபமகற்றத் தருவைகைநாட்டின்
மழவயிற்குகவேள் வளரருட்பெற்று
மழவையிற்சிறந்து மலிவுறுதவத்து
வழிவழியுயர்ந்த மரபினன்சுருதி
கழறுநற்குலத்தோர் கன்னியைவேட்ட
லொழியமற்றோரா தொழுகறுதொழிலினன்
நித்தியநைமித்திய நியமவேள்பாச
னத்திலான்னீய நடையினில்வழுவான்
வாசபேய மகவனைமுடித்தி
ராசர்மகிழ நல்முயர்கண்யன்
திகழ்சொக்கைய தீக்ஷிதர் புத்திரன்
குகனோர்விப்பிர குலசிகாமணி
சிதம்பரதீக்ஷிதர் சிரேஷ்டரென்ன

நிகழும்பரவி நீணிலத்தோர்புகழும்
பதிதிகழுங்கணபதி தீக்ஷிதரையுந்
திடவானொரு தீக்ஷிதர்தமையும்
சுதனெனப்பெற்ற சுகிர்தசீலவான்
இகழுறுவடநூ லெல்லைகண்டவன்
அரியமுத்தமிழ மஷ்டாவதானமும்
உரியவிலக்கணத் துட னுணர்புலவரே
ருசுமதுரஞ்சித்ர விஸ்த்தாரமா
மோசைக்கவிசூற் குயர்சிரோரத்னம்
பாடல்படித்தல் பிரசங்கித்தலெனும்
நாடகக்கவிஞர் நடுங்கும்வாசாலகன்
குழந்தைமன்னவனுங் கோடிமன்னவனுஞ்
செழுந்தமிழ்வளர்க்குந் தேவைமன்னவனுந்
தஞ்சைமன்னவனுந் தமிழ்கேட்டுவந்த
சிஞ்சிதமிலங்கு சிவிகைப்பிரதாபன்
மெய்த்தனச்செல்வ மிகுந்திகபரந்திகழ்
புத்ரனைவேண்டிப் புனிதமாயோங்கு
மயின்மலையதனை வலஞ்சூழ்ந்தொருநாள்
உயர்சன்னிதியுற் றுபவாசமிருந்
துள்ளத்துணர்ந்தன் றொருபகற்பொழுதிற்

# சிறப்புப்பாயிரம்.

பிள்ளைத்தமிழ்க்கவி ப்ரபந்தமிஃதியற்றிக்
கந்தர்தமருளாற் கண்ணெனவிரண்டு
மைந்தரைப்பெற்று வாழ்விற்சிறந்தன
னகிலமெங்கு மதிசயித்துவக்கும்
மகிமைசேர்சுப்பிர மணியபாரதியே.

சிறப்புப்பாயிரமுற்றும்.



# சாத்துகவிகள்.

இஃது
காரைக்குடியில் இருக்கும்
மழவராயனேந்தற்சிதம்பரதீக்ஷிதர்
அவர்கள் குமாரர்
அஷ்டாவதானம்
**பாலசுப்பிரமணியஐயர்**
இயற்றியது.

---

## விருத்தம்.

1. அந்தமயிற்பூதரத்தான்மீதுமழவைப்பதியி
லமர்சொக்கையன்
சந்ததிசுப்பிரமணியபாரதியோர்தினஞ்செய்
பிள்ளைத்தமிழ்ச்சீர்கேட்டுச்
சிந்தைதெளிவானபுதன்மதிகாலென்றான்
கவியுந்தெண்ணீரிற்செல்
லுந்தரமீனத்துச்சனானென்றா
னகத்தியன்மெய்யொடுங்கினானே.

2. மயல்வடிவாமேனவிடத்தொருவள்ளி
முனம்விருத்தவடிவுகாட்டுஞ்
செயவடிவேற்காளையெனுஞ்சிகண்டிமலைச்
சண்முகன்மேற்சேயென்றோதும்

பெயர்தனக்குந்தனதூரின்பெயர்தனக்கு
மிசைவர்கப்பிறங்கோர்நாளில்
நயமழவைச்சுப்ரமண்யபாரதிபிள்
ளைத்தமிழைநவின்றான்மாதோ.

3. சங்கரன்றன்மகிமைதெரித்திடவுலகிற்
சங்கரனைச்சார்ந்ததேபோல்
பொங்குமழவைச்சுப்ரமண்ணியன்றன்
பெயருலகிற்பொலிவுற்றோங்க
வெங்கண்மழவைச்சுப்பிரமணியனை
வந்தைநந்தின்னியலான்மேன்மை
தங்குபிள்ளைத்தமிழாகக்குன்றையிற்பிள்
ளையைவேண்டிச்சாற்றினனே.

4. பெரும்பரசுமானணிந்தசெழுங்கரத்தான்
சடையிலிளம்பிறையன்வானும்
பரும்பரசுமானபரன்றருங்குமர
னிருதனம்பம்பரனேர்வள்ளி
விரும்பரசுமானதிக்குன்றையில்வேண்மேற்
பிள்ளைத்தமிழைச்சொற்றான்செங்
கரும்பரசுமானபங்தோய்மழவைச்
சுப்பிரமணியகவிவல்லோனே

5. தனகனத்திவளரிடையந்தரத்தி
யுமையுதவியசந்ததிசெவ்வேற்கை
யனகனத்திவதனனிளந்துணைகணே
நேர்விழிக்குறமின்னணையுந்தோட்சி
கினகனத்திவளர்முருகன்மீதுபிள்ளைத்
தமிழுரைத்தான்கிளர்ஞானத்திற்
சனகனத்திவருந்தடம
ழவைச் சுப்பிரமணியனுந்தமிழ்வல்லோனே.

---

இஃது
மழவாபுரிச்சுப்பிரமணியதீக்ஷிதர் குமாரர்
**சிதம்பரபாரதி**
இயற்றியது.

---

பொழிற்குலவுமழவைநகர்ச்சொக்கய
ராஸீன்றவரபுத்ரனென்னச்
செழிக்கவருஞ்சுப்ரமண்யபாரதியை
மயின்மலைமேற்சிறக்குஞ்செவ்வேள்
விழிக்கருணையமுதாட்டிப்பருவங்களாலமைத்து
மேன்மேலோங்கு
மொழிக்கரும்பினிசைச்சுவையைச்
செவிக்குணவாயகமகிழ்ந்துமுகந்தான்மன்னே.

இ ௦௦ து

இராமநாதபுரம் சமஸ்தானவித்துவான்
அஷ்டாவதானம்
**சரவணக்கவிராயரவர்கள்**
இயற்றியது.

---

1. திரைக்குமரன்படர்மாயையவரைக்குமொரு
வேல்பிடித்தசெவ்வேட்கை
வரைக்குமரன்மேற்பிள்ளைத்தமிழையொரு
பகற்பொழுதிலவழுத்திணன்சிற்
பரைக்குமரனடிக்குமன்புசெயுமழவைச்
சொக்கயமால்பாலன்மார்பில்
விரைக்குமரவிந்தமணிசுப்ரமண்யபாரதிபா
வேந்தர்வேந்தே.

2. சருக்கரைக்கும்பாற்குழம்புதனக்குமிணை
யென்பர்சிலர்சரணர்சன்மக்
கருக்கரைக்கும்போதமென்பர்சிலர்சிலர்நற்
சந்தவிலக்கணமீதென்பர்
எருக்கரைக்குஞ்சிந்துமுடிக்கருமறைபோ
தித்தகுன்றைக்கிறைமேற்கல்வித்
தருக்கரைக்கும்பிடச்செய்சுப்ரமண்யபாரதி
சொல்பிள்ளைத்தமிழைத்தானே.

---



உ

கணபதி துணை.

முருகக் கடவுடுணை.

## மயூரகிரிச் சண்முகநாதர்

# பிள்ளைத்தமிழ்



விநாயகர் துதி.

வெண்பா.

பூங்கமல வாவி புடைசூழ் மயூரகிரிக்
காங்கேயன்மேற் பிள்ளைக் கவிபாடத்—தேங்கி
நடக்குஞ் சண்முகத்தான் நாட்கலையைத் தாங்குங்
கடக்குஞ் சண்முகத்தான் காப்பு.

### காப்புப் பருவம்

சுப்பிரமணியர் துதி.

(க) பூமேவுதடங்கடல்சூழ் புவியாகியகண்ட
பூரணமாய்க் காரணமா யாரணமுமாகிக்
காமேவுநறும்பொழில்சூழ் மாயூரகிரிவாழ்
கடவுளேநின்கவிக்குக் காப்பெவனாயுரைப்பேம்
நாமேவுகலைவாணி நாதனுக்குமரற்கு
நளினமலர் விழியாற்கு நாகநாட்டிறைக்குந்
தேமேவுவானவர்க்கு மசுரர்பகைதடிந்த
செல்வனீயதனா னின்கவிக்குநீகாப்பே

வேறு.

சிவஸ்துதி.

(2) வடபொலன்கிரியெனு முலைக்கண்கருமெனாவிரு
மதிமுகம் வெளுத்திடாது
மண்ணருந்தாதகடு பூரித்திடாதுநெடு
மணிவயி றுளைந்திடாது
குடவளைகள்குமுறவரு சரவணையினிலவுபொழி
கோடிசூரிய கிரணமோர்
குலவுதிருவுருவெடுத் தென்னவருகுன்றுக்
குடிக்குமரனைப் புரக்க
தடவரையெனுங்கயிலை வேர்விழுந்தென்னவிடை
தவளவேதிகையி னுப்பண்
டணித்தங்குரித்துத் தழைந்துவெங்கட்செவித்
தறுகட் பணாடவிக்கார்
விடவரவமெனுநெடிய விழுதிலகவிபுதாதி
வெண்கொடிதுலங்க மலர்பொன்
மிளிர்பிறைவிளங்கமெய்ஞ் ஞானப்பலன்றரும்
வெண்ணிறக் கற்பதருவே.

தேவிஸ்துதி.

(3) விண்ணவர்கள்பொன்னுடு மேவ விபுதர்க்கரசு
விருதுசெங்கோ னடாத்த
மின்கொடியெனத்திகழ் புலோமசைமணிக்குழையின்
மேவுதா டங்கமிலகக்

கண்ணளிருகண்மலர் முகிழ்ப்பநான்முகன்மலர்க்
கமலத்தில் வீற்றிருப்பக்
கார்த்திகைகளிப்பவளர் சரவணப்பொய்கைவரு
கந்தனைத் தனி புரக்க
தண்ணறுங்கமலமுங் கதலியுந்தந்துவட
தருவிளந்தளிர் தளிர்த்துத்
தண்கரும்புலவுமாக் கோங்கரும்பிச்செவ்வி
தண்காந்தண் மலர்தந்துதேன்
எண்ணறுங்கிஞ்சுகம் பூத்துநற்சண்பகமு
மீன்றுகுவலய மலரவே
யிமயாசலத்தெழூஉந் திமையோர்தொழப்படர்ந்
திசையுமரகதவல்லியே.

திருமால்.

(1) மூரித்தடக்கையான் முசலஞ்சுழற்றிமத
மும்மதம் பெருகவெகுளி
முகபடாங்கொண்டுபய நிகளந்தெறித்தடரு
முனைமனப் பாகெறிந்து
கூரித்தவெண்கோடு கொடுமோதிவாழையின்
குலையின்வா னவளைவாட்டுங்
குஞ்சரத்துயிர்கொண்ட மாயூரகிரியில்வரு
குருபரன்றமிழ்புரக்க
வேரிச்செழுங்கமல மலர்குவியமலரிணிடை
விளரிவண்டினமொடுங்க

மேதபாகாயமுறு யோகியெனமறுகூட்டில்
வீறுபுள் ளினமடங்கப்
பாரிற்படர்ந்திலகு கவளமெனவெழுதிமிர
படலமுழு தும்விழுங்கப்
பரிதிமண்டலமறைய வோராழிதொடர்கின்ற
பச்சைப் பசுங்கொண்டலே

வேறு.

விநாயகர்.

(௫) போரேறுகடகளிறு கொண்டலொத்தார்த்தெழ
வானேறுபரிதியணி மண்டலத்தூட்குடை
போலேறுகடுவெயில் மறைந்திடப்போர்க்கெழு
பூபாலர்தொடுசிலை வளைந்திடப்பார்த்திபர்
தேரோடுபுரவிகண் மடிந்திடக்காக்கைகள்
போயேறுதருநிழ லளைந்திடப்பூப்பொலி
யேரேறுதுளபமுகில் பஞ்சவர்க்காப்பொரா
மூவாறுதினமமரு மண்டிசைப்போர்க்களை
யேடாகவடவரை யிலங்குபொற்கோட்டினி
லேழ்பூமிதொழமுக மிசைந்தநற்கோட்டினை
நாராசமெனவெழுது குஞ்சரத்தாட்டினை
யோநாளுமனதினிடை யஞ்சலித்தேத்துதும்
நேரேறுநவமணிசெய் பந்தரிற்கார்த்திகை
மாணுரொடாமகளிர் மங்களத்தாற்பொரி
நீடாழிமணிசிதற மூண்டகப்பூப்பொதி.

நீர்வேதன்விதிமுறை சடங்கிடப்பாட்டிசை
மாருதுதரவமர துந்துமிக்காட்டொலி
நீடேழியுருமென முழங்கிடப்பூட்டிய
வாரேறுகளபமுலை குங்குமச்சேற்றுடன்
மார்பூடுவரமுக மிலங்கிடப்போர்த்தொழின்
மாருதுவிழியிணை புயங்களைப்பார்த்திட
வாணுடனருளமர குஞ்சரிப்பேட்டுடன்
நாணேடுதலைவளைய வுந்திருப்பூட்டிய
மாயூரகிரியில்வரு கந்தனைக்காக்கவே.

வேறு.

இலக்குமி.

(i) கண்டேறுசொற்கண்டு தத்தையடையத்தனங்
கண்டகமலம் பயமுறக்
கலகவிழியிணை கண்டு வரிவண்டுமதுவுண்டு
கருகியுடல் பதறவடிவு
கொண்டேறுபச்சைப் பசுந்தோகைசிறைபினொடு
கொடியவன மடையவந்தக்
குறமயின்மணம்புணர் மயூரகிரிமுருகனைக்
கூறுமென்றமிழ்புரக்க
வண்டேறுசுரிகுழற் கற்பகந்தனைநல்க
வதனமதி யத்தையருள

மார்பிடங்கொண்டுவட வரையைச்சினந்தன
மதவார ணத்தையுதவப்
பண்டேறுகிஞ்சுகப் பூங்குழறவாய்நறும்
பவளமமு தினையளிக்கப்
பாதநூள்பலகோடி யாமகரிரைத்தரப்
பாற்கடலுதித்தமயிலே.

பிரமன்.

(7) விண்டலத்துடுவினம்பொலுபொலென் றுதிர்ந்து
மேருநெக் கெர்ச்சித்துநீள்
வெடிவால்விதிர்த்துவெம் பகுவாய்திறந்தழ்
விழியனற் பொறிகள்சிதற
அண்டலர்களெனவந்த வானவர்கள்கடகரிறி
தாமெனக் கவின்மடங்க
வாருயிர்கவர்ந்தருண் மயூரகிரிவாழு மென்
னையன்முத் தமிழ்புரக்க
பண்டுழ்ந்துள்குவியாது வண்டுகள்புகாதுநீள்
பங்கப்படாது நாளும்
பரிமளம்வாடாது வருமாயனுந்தியம்
பங்கேருகத் துதித்து
மண்டலமுமண்டபகி ரண்டநவகண்டமும்
மற்றுமொருநொடியிலே
மனத்தினைடதினைத்துப் படைத்துக்களித்துநான்
மறைதொழவருங்கடவுளே.

(16503(9067)



வேறு.

கலைமகள்.

(8) சேற்றுக்கமலத் திடைப்புகுந்து
செழும்பாசடையின் குருத்தருந்தி
தெண்ணீருழக்கி நீர்விடுத்துத்
தெறிக்குமுலைப்பாற் புனிற்றெருமை
காற்றுக்கதலிக் குருத்தொடித்துக்
தனித்துக்கறித்துச் சண்பகத்திற்
றனிக்கண் வளர்மா யூரகிரித்
தலைவன் ரீதிற் றமிழ்ப்பரக்க
போற்றற்கரிய புரந்தரனும்
புணர் மின்கொடியாம் புலோமசையும்
புகழ்வானவரு மரம்பையரும்
பொருந்தாச் சிறையிற் போகாமற்
கூற்றுக்கிணையாய் வடிவெடுத்த
குடக்காதனுக்கு விழிகடியில்
கூரவரந்தா வெனநாவிற்
குடிகொண்டிருந்த குலமயிலே.

வேறு.

பலதேவர்.

(9) வீடாறுபெறுமுதல்வன் மற்றொருப்பிலாத
வேதாவையொருபிரணவத்துக்குநீயும்
மேலானபொருளுரை யெனக்குட்டுநேம

நாடாளனிதமயி னடத்திக்குலாவு
மாயூரகிரிவரு குறத்திப்பெணேய
னூடோறுமனமகிழ் கவிக்குச்சகாயர்
வாடாததிதியுர கர்ப்பத்தினூடு
போயேகவடிவெழு மருத்துக்களாக
மாறூடுகுலிசனுயர் சொர்க்கத்தில்வாசர்
நீடாழிபெருகுதிசை யெட்டுக்குநாதர்
மேனாளிலதிதிமுறையிற்பெற்றபாலர்
நேராகவருமமரர் முப்பத்துமூவரே.

வேறு.

இதுவுமது.

(10) குதிக்குந்தரங்கத் திரள்கொழிக்குங்
குளிர்மாமணிவெண் ணிலவினக்
குலவுங்குமுத முகையவிழக்
கோலவரிவண் டினந்தொடரக்
கதிக்குந்தேனு றெனப்பெருகிக்
கழனிதோறும் பயிர்விளைக்குங்
கனஞ்சேர்துங்க மலையில்வளர்
கதிர்வேன்முருகன் கவிபுரக்க
உதிக்குங்கிரணன் றிரணமெனை
வொளியேபரப்பி யிறுங்காலத்
துருமேறென்ன வுருத்தெழுந்தங்
கொருமாமரத்தி னுடல்பிளந்து

துதிக்கும் வேலுந் திகழ்மயிலுந்
　　துடிசேர் சேவற் கொடியுமிசைந்
துலங்குநவவீ ரருமடுபோர்
　　தொடங்குந் திடஞ்சே னிடும்பனுமே.

காப்புப்பருவம் முற்றும். (ஆக 10.)

## ௨. செங்கீரைப்பருவம்

வேறு.

உரையிட்ட சக்ரகிரி சங்ககிரியுயர்சக்ர
　　வாளகிரி மலையகிரிநீள்
வடபொலன்கிரிகைலை யங்கிரிவராககிரி
　　மறுகுமந் தரகிரிமகா
தரையிட்டவுதயகிரி யத்ரகிரியிந்த்ரகிரி
　　சந்த்ரகிரி விந்தகிரியோர்
சத்யகிரி பத்மகிரி சிவகிரிவிசாலகிரி
　　சையகிரி யிமயகிரிவா
னிரையிட்டராமகிரி சோமகிரியேமகிரி
　　நீலகிரி சிகரகிரிசேர்
நிடதகிரிகந்தமா தனகிரிகடோரகிரி
　　நீலமா யூரகிரியுந்
திரையிட்டமலர்வாவி சூழவிளையாடுமுகில்
　　செங்கீரையாடியருளே

திட்கட்குவட்டிலெழு துங்கக்கிரிக்கிறைவ
செங்கீரையாடியருளே.

(2) கூரிளம்பிறைக் குஞ்சரக்கோட்டினெழு
குளிர்மணித் தாளமள்ளிக்
குமுறுகண்ணாவக் குருளைவெருளச்செழிய
குங்குமச் சினையொடித்து
மாறுகமுட்கொண்டு வடகுவடெனுங்கடிய
மலைவிட் டிறங்கி வலமும்
வாரிச்சுழித்துச் செழித்துநிரைகொண்டு நரா
மண்டிவலை கொண்டெழும்பி
மேனுடுசெவிடட முழங்கித்திரண்டுகரை
மேவுகா லானிறைப்ப
வேரிச்செழுங்கமல வாவித்தடம்பெருகி
வீசுசலராசி தேடித்
தேனூறுபுடை பெருகு மாயூரகிரிமுருக
செங்கீரை யாடியருளே
திட்கட்குவட்டிலெழு துங்கக்கிரிக்கிறைவ
செங்கீரை யாடியருளே.

(3) பொன்னிறத்தாவிகொடணைத்துவெள்ளோதிமம்
பொற்பிளம் பார்ப்பினுக்குப்
புணர்முலைப்பாலொடு கலந்துசெங்கமலப்
பொகுட்டுறை நறுவெடுத்துத்

துன்னிதழ்ச்சங்கொடு புகட்டிவ்வூணத்திடை
சுழற்றிக் குறங்குதட்டித்
தூய்யபங்கேருக மணித்தொட்டிலிட்டுத்
துதைந்துதா லாட்டியிரவின்
மன்னுசெங்குமுதப் பசுந்தேறலூட்டிமலர்
வாய்வளைப மாறியுண்டு
மணிவயிறுதேக்கிட் டிரதிகேளிவிளையாடி
மார்பினிடை துயில்கூரவே
தென்னிடுங்களிவண்டு சூழ்நேமநாடனே
செங்கீரை யாடியருளே
திங்கட்குவட்டிலெழு துங்கக்கிரிக்கிறைவ
செங்கீரை யாடியருளே.

(1) மன்றலந்தெரிவையர் குழாமெதிர்செலக்காள
மாவிளங் குயில்கள்கூவ
வண்கமுகிளம்பாளை சாமரையிரட்டமுகை
மல்லிகைச் சங்கொலிக்க
இன்றுதினநன்றென விளந்தெங்குதலையசைத்
திளநீர் குலுங்கவரிவண்
டிசைபாடவனசமுகை மலரமலர்வாய்திறந்
தெதிர்மொழி தரக்கிஞ்சுகம்
துன்றுசெங்காந்தளங் கைகுவியநறுமலர்கள்
சொரிகடம் பலர்விரிக்கத்

தும்பைமலர் நறவொழுகு மன்னராசிகளெணக்
தொடைவேள் விருந்தருந்தத்
தென்றலங்குலவிவரு குன்றையம்பதிமுருக
செங்கீரையாடியருளே
திங்கட்குவட்டிலெழு துங்கக்கிரிக்கிறைவ
செங்கீரை யாடியருளே.

5) கடலகடுகிழியவரு மலைசுவறநெடியபவட
கனககிரி நிலைபெயரநீள்
கறைபொழுதுபடவரவு திசைகள்படவிசைபிறங்கி
கடக ரிறுபிரிற நெடுமால்
வடதருவின்மறையமறை யுகலுமயனகல்வனச
மலரில்விழ வமரரிரிய
மதிபருதிதனதுநிலை விடவுடுவிவுலகினிடை
மலர்சொரிவ தெனவுதிரநீள்
புடவிகிடுகிடெனவுமை யவளுமெமதரனுநிது
புதுமையென வுடல்பதறியே
புயல்கள்சளசளெனவிழு மழைசொரியவினையசுரர்
பொருமனது பறையறையவே
திடதுடனமொடுகடின நடனமிடுமயின்முருக
செங்கீரை யாடியருளே
திங்கட்குவட்டிலெழு துங்கக்கிரிக்கிறைவ
செங்கீரை யாடியருளே.

வேறு.

காதலுடன் குறமாதுபுணர்ந்தவனேடுகசெங்கீரை
கங்கைநதிக்கு ளெழுந்தமதக்கரிமுடுகசெங்கீரை
சோதருசந்த்ரகலாதரிதந்தவனேடுகசெங்கீரை
குஞ்சரிமெய்ப்புறமஞ்சரியிட்டவனேடுகசெங்கீரை
மோதகமுண்டபிரானெடுவந்தவனேடுகசெங்கீரை[கீரை
முண்டகனைப்பெருவன்சிறைவைத்தவனேடுகசெங்
யாதியொடந்தமிலாதசெழுஞ்சுடராடுகசெங்கீரை
யக்கசன்மைத்துனதுங்கமலைக்குகனேடுகசெங்கீரை

நாரணனுக்குருமாதுமகிழ்ந்திட வாடுகசெங்கீரை [கீரை
நஞ்சுமிடற்றினர்கொஞ்சுமறைப்பொருளாடுகசெங்
வாரணமொன்றடரானனபஞ்சகனேடுகசெங்கீரை
மந்தரவெற்பினுயர்ந்ததிரட்புயனேடுகசெங்கீரை
பூரணசந்த்ரசுபானனரஞ்சிதனேடுகசெங்கீரை[செங்கீரை
பொய்குதிரைக்கடலுண்டவன்மெய்க்குருவாடுக
யாரணமுந்திசைமாமுகனுந்தொழவாடுகசெங்கீரை[ரை
யக்கசன்மைத்துனதுங்கமலைக்குகனேடுகசெங்கீ

கூர்கொண்ட வேலையுங்கைப்படுத்திப்பகழி
கோடியொருதூணியாக்கிக்
குரைகடலைமுனிவாய்மடுத்துமாணிரிதரக்
குவலையவனம்புகுத்தி

வேர்கொண்டகமலத்தைமுட்டாமௌனந்தூறி
மீனையிமையாதிருத்தி
வெங்கட்கொடுங்கூற்றையந்தகனைத்தள்ளி
வெவ்விடம்பயிலிட்டுமைக்
கார்கொண்டுவிளரியிருகடைசிவந்தையரி
கலந்துமையெழுதிவள்ளிக்
காதளவுசெல்லுங்கருங்கட்குறத்தியிரு
கனதனமுமொய்ம்புதோய
சீர்கொண்டுமுன்னின்றமதவாரணத்திளவல்
செங்கீரை யாடியருளே
திங்கட்குவட்டிலெழுதுங்கக்கிரிக்கிறைவ
செங்கீரையாடியருளே.

(9) வண்டிசைபெற்றகடம்பமலர்ப்புயசெங்கோ செங்கீரை, மன்றன்மிகப்பொலிகுன்றைநகர்க்கிறைசெங்கோசெங்கீரை, யெண்டிசைமெச்சுசிகண்டிமலைத்துணைசெங்கோசெங்கீரை, யெங்கள்குறப்பெண்மணம்புணர்வித்தகசெங்கோசெங்கீரை, யண்டினர்துக்கமடங்கவொழித்தவசெங்கோசெங்கீரை, யந்தரிபெற்றருள்சுந்தரவிக்ரக செங்கோசெங்கீரை, தெண்டிரைவற்றவெறிந்தவயிற்கர செங்கோசெங்கீரை சிங்கமடர்த்தவதுங்கமலைக்குகசெங்கோசெங்கீரை.

(10) ஐந்துமுகத்தினர்தந்தசுபுத்திர செங்கோசெங்கீரை யன்றிலெனத்தகைகுன்றுதுளைத்தவசெங்கோசெங்கீரை, யி

ந்துமுகத்திலகுந்திலதத்தொருசெங்கோசெங்கீரை, யெங்கு
மதுப்பொலிகின்றநதிக்கிறைசெங்கோசெங்கீரை. முந்துதமி
ழக்கவிஞன்சிறைவிட்டவசெங்கோசெங்கீரை, மொய்ம்பரு
ணைப்புலவன்கவியிட்டவசெங்கோசெங்கீரை, சிந்துரவெற்
பையடர்ந்ததிரட்புயசெங்கோசெங்கீரை, சிங்கமடர்த்தவது
ஙகமலைக்குகசெங்கோசெங்கீரை.

செங்கீரைப்பருவமுற்றும். ஆக 20.

---

## தாலப்பருவம்.

---

(1) உலவைதழையக்குதித்துவரு
முருமேறென்னக்குமுறியெழுந்
தோடிப்பாய்ந்துசினைகிளைக
ளுதிரத்தாவியுறுமிநெடும்
பலவின்குடக்காய்பறித்தொடித்துப்
பசுந்தேனருந்திக்குறுஞ்சுளைகள்
பகட்டிக்குழவிக்கருத்திமுலைப்
பாலுங்கொடுத்துக்குறங்கினில்வைத்
திலகுங்கரத்தாற்றலைவகிர்ந்தங்
கெடுத்துமார்போடணைத்துமர
மேறிமுழங்கும்முகில்பார்த்தங்
கிறங்கிக்கலங்குங்கவியினங்கள்

குலவுநேமவளநாட்டுக்
கோவேதாலோ தாலேலோ
குன்றக்குடியில்வீற்றிருக்குங்
குமராதாலோ தாலேலோ.

(2) பயிலுங்கிளியின் பார்ப்பினங்கள்
பச்சென்றிளகியிறுமாந்து
படர்நெட்டிலையின் குருத்தெழுந்த
பசுங்காய்க்கதலிக்கனிகோதித்
துயிலும்பொழிலினிடையகலாச்
சுரும்புங்கரும்புந்துணைவளைக்கச்
சூ.ரச்தரும்புந்தளவரும்புஞ்
சோகந் தருமசோகமுடன்
வெயிலினிளங்காற்கதிரெறிக்கும்
வேரிக்கமலமுகையுமுகை
விள்ளுங்குமுதப்போதுமுறை
விளங்குந்தாணிபுகக்கூடும்
குயில்சேர்நேம வளநாட்டுக்
கோவேதாலோ தாலேலோ
குன்றக்குடியில்வீற்றிருக்குங்
குமராதாலோ தாலேலோ.

(3) கதிக்கத்தளிர்கள்பளபளெனக்
ககனமுகட்டில்விளங்கநெடுங்

# பிள்ளைத்தமிழ். 

கப்புவளரத் திசைமுழுதுங்
கவர்ந்துபரப்பிநேர்பருவந்
து திக்குமேலாய்மலர்சொரியச்
சுரும்புவிரும்பச்சுரந்துதலை
தூங்குகுலைக்காயிலக்காகத்
துருவனுலகிற்றோன்றமுளைத்
து நிக்குந்தனிமாமரமெனவே
யோங்குமசுரனுடன்மடிய
வொருவேல்விளக்கவிருபிளவி
னொருபாதியினின்றுலகுதிரக்
குதிக்குந்தோகைப்பிடரேறுங்
கோவேதாலோதாலேலோ
குன்றக்குடியில்வீற்றிருக்குங்
குமராதாலோதாலேலோ.

(1) கோடுங்குதித்துக்கரைபுரண்டு.
குமிழியெழும்பியலைசிதறக்
குடக்குங்குணக்குந்தெரியாது
குளிர்மாமதியுங்கோகனகத்
தேவுநடுங்கித்திசைமாறத்
திசைக்குஞ்சரமுஞ்செவிடுபடச்
செவியேகண்ணுமரசரெனச்
சிறக்குமரவும்விழிபுதைப்ப

மேவுபுறத்தண்டமும்வெடிப்ப
விபுதர்க்கரசுந்திசைமுகனும்
வெருளவடவைக்கனலடங்க
வெவ்வாய்திறந்துசிறகடித்துங்
கூவுஞ்சேவற்கொடியுடைய
கோவேதாலோதாலேலோ
குன்றக்குடியில்வீற்றிருக்குங்
குமராதாலோதாலேலோ.

(5) தளிருமொளிர்மின்கொடியுநிறத்
தங்கத்தகடுந்துகிருமொன்றச்
சமைத்தகுறப்பெண்முகத்துறைசஞ்
சரிகமிரண்டுஞ்சஞ்சரிக்க
வொளிருங்ககனத்தரசுகந்த
வும்பர்க்கரசனுவந்தளித்த
வொருபெண்ணரசினிருவிழிவண்
டொருபானெருங்கவருமரம
களிருமுகத்தாமரையிலுறை
கருந்தேனிடச்செந்தேனருளிக்
கருணைகுடிகொண்டருணகிரி
கவிமாலிகையுங்கலந்திருக்குங்
குளிருங்கடப்பந்தார்புனைந்த
கோவேதாலோதாலேலோ

குன்றக்குடியில்வீற்றிருக்குங்
குமராதாலோதாலேலேலோ.

வேறு.

(6) செந்தாமரைமுகவேர்வோடிலகத்
திலகமசைந்தாடத்
தெண்டிரையொலிமலிதண்டைபுலம்பு
சிலம்புகலந்தாடப்
பைந்தார்குழையொடுசுட்டியுடன்புனை
பட்டமசைந்தாடப்
பணிலத்தொடையடர்பவளத்தொடைபொடி
பண்டியசைந்தாடக்
கந்தாகுமரகுழந்தாயெனவறு
கார்த்திகைகொண்டாடக்
கங்கணமிட்டொளிர்வங்கணமிட்டொலி
கடகக்கையாடச்
சந்தாடவிதிகழ்குன்றைக்கதிபதி
தாலோதாலேலோ
தங்கமலைக்குயர் துங்கமலைக்குக
தாலோதாலேலோ.

(7) *அங்கந்துளுவஞ்சீனமராடவிராடங்கல்யாணம்
ஆகரைடில்லிகொழும்புகலிங்கமராளங்கேரளமா

வங்கங்கோசலைகாசிகிராதகமச்சமொடச்சீன ?
மகதங்குகுதவிதர்ப்பங்கருநடமத்ராங்குருதேசங்
கொங்கங்கவுடம்பப்பரிடதங்குச்சரமச்சிநெடுங்
குடகந்திரவிடம்வடபாஞ்சாலங்குளுவங்காந்தார
சங்கம்புகழுங்குன்றைக்கதிபதிதாலோதாலேலோ
தங்கமலைக்குயர்துங்கமலைக்குகதாலோதாலேலோ

(8) திரள்சங்கெறிசிதிகங்காநதிபுனல் சிந்துஞ்சிந்துநதி
சீரகமாநதிநூபுரமாநதி திருமணிமுத்துநதி
விரளம்புனல்செறியமுநாநதிகா விரிநதியொடுகோதா
விரிநதிநருமதைநதிசரசுதிநதி விரசாநதிகளையிற்
புரளம்பமுகியகிஷ்ணாநதிதாம் புரநதிசித்ரநதி
புயங்கமகாநதிவைகாநதியொடு புவிநதியும்புகழத்
தாளஞ்சிதறும்மதுநதியுடையாய் தாலோதாலேலோ
துங்கமலைக்குயர் துங்கமலைக்குகதாலோதாலேலோ.

(9) பொன்செறிகமலப்போதுறைவாவிப்
புனலூடெழுமரசிற்
பொன்னிலைபாதிவிழப்பகுவாயுறு
பூங்கயலாகநெடும்
வன்சிறையுளபுள்ளினமாகக்கரை
வாயுறுபாதியுமே
வாலெயிறிலகுநிசாசரனைப்பொரு
மால்வடிவேபோல

மின்செறியுலகத்ததிசயமிதுவென
விழியிமையாதுமன
மெய்ப்புறாநக்கீரனையோரலகை
விரைந்துகவர்ந்திடுநா
டன்சிறைதீரத்தனிவேல்விடுகுக
தாலோதாலேலோ
தங்கமலைக்குயர்துங்கமலைக்குக
தாலோதாலேலோ.

(10) வெங்கட்சுறவெறிமதுநதியூடே
வெய்யோனெழுபரிமேல்
வீசியகசையெனநெட்டிலையோங்கி
விளங்குகரும்பூடே
புங்கஞ்செறிகுணசாலியிதென்றெழு
புவியும்புகழ்தராலாற்
பூரித்திலகித்தலைகீழாய்விழு
பொலிவுறுகதிரூடே
வங்கஞ்செறியுஞ்சரவணவாவியின்
மாமறையோர்மனைமேன்
மாடமுகப்பிற்கோபுரமேனிலை
மணிமுதல்மறுகூடே
சங்கந்தவழுங்குன்றைக்கதிபதி
தாலோதாலேலோ

தங்கமலேக்குயர் துங்கமலேக்குக
தாலோ தாலேலோ.

தாலப்பருவமுற்றும்.

---

## ௩. சப்பாணிப்பருவம்.

வேறு.

(1) நீராட்டியாட்டுமண்ணீர்கொடு சுழற்றியெழு
நீணிலக் காப்புமிட்டு
நிலவொழுகுபட்டாடை கொண்டுட றுடைத்துவெண்
ணைதுதிலச் சுட்டிகட்டிச்
சீராட்டிமடியில்வைத் தீராறு கையுஞ்
செலுத்திக் குறங்குதட்டித்
தெள்ளமுதெடுத்து வெண்சங்கிடை குலுக்கிநற்
செவ்வாயுறப் புகட்டிப்
பாராட்டியிருகவு ணெரித்துச் செறித்துவெம்
பணைமுலேப் பாலருத்திப்
பவளவாய்வைத்துண்ண வாய்க்கடங்காதபால்
பாற்கடலெனப் பெருக்கித்
தாராட்டியிருமூவர் முத்தாடுமுத்தைய
சப்பாணிகொட்டியருளே

தங்கமலைநிகரான துங்கமலை யாதிபதி
சப்பாணிகொட்டியருளே.

(2) சீரிட்டசூழியக் கொண்டையுந் தமனியத்
திடுபிறையும் வெயிலுமாறுத்
திலகநுதலிலகவரு சுட்டியும் பட்டமுந்
திங்கண்மறு வனையபொட்டு
நேரிட்டமகரகுண் டலமுமிடு கண்டசர
நித்திலக் கொத்துமணிவாய்
நின்றொழுகுமழலைவா யமுதப் பெருக்குமணி
நீலவளையுங் காப்புமேல்
வீரிட்டலம்புஞ் சிலம்புநிறை கிண்கிணியு
மேவுமரை வடமுமார்பின்
மேலிட்டுமாறுடு கொத்துச் சரப்பணியு
மேனியும் புழுதிதோயத்
தாரிட்டவீரரொடு விளையாடு மதகளிறு
சப்பாணிகொட்டியருளே
தங்கமலைநிகரான துங்கமலை யாதிபதி
சப்பாணிகொட்டியருளே.

(3) மதிகொண்டவான்முக டளாவிவஞ்சனை கொண்ட
மாமரமடர்த்த கையால்
வாரணக்குமரிதா னம்மிமிசை வைக்கவே
மலரடியெடுத்தகையால்

துதிகொண்ட வள்ளிமண மாலையிட்டுப்பிறகு
தோண்மாலை யிட்டகையால்
சூழலகுசெவிடடக் கூவுசேவற்கொடி
துலங்கிய மணிக்கரத்தாற்
றிதிகொண்டகுறுமுனிக் குபதேசநாட்செய்த
சின்முத்திரைக் கரத்தால்
செந்தமிழுகந்த நக்கீரனை யகோரமாஞ்
சிறைவிடுத்திடு கரத்தால்
குதிகொண்டுவருமயிற் பரிநடத்திடுகையால்
கொட்டியருள் சப்பாணியே
கொண்டலம்புகழ்பருகு குன்றையம் பதிமுருக
கொட்டியருள் சப்பாணியே.

வேறு.

(4) மாறனொனுமறுபீனர்தருபுலி
கொட்டுகசப்பாணி
மழலைக்கிளிபுகல் பழனிக்கதிபதி
கொட்டுகசப்பாணி
சேனைபதியெனவானோர்பணிபத
கொட்டுகசப்பாணி
செந்தூர்வருகுக விந்தூராறுமுக
கொட்டுகசப்பாணி
நீராவெனவெதிரானோர்பொருபவ
கொட்டுகசப்பாணி

# பிள்ளைத்தமிழ்.

நேமத்தொடுகதிர் காமத்துதிமதி
கொட்டுகசப்பாணி
கோனொரொடுவளர் தேனுறிடையவ
கொட்டுகசப்பாணி
குன்றைப்பகிவளரண்டர்க்கதிபதி
கொட்டுகசப்பாணி.

வேறு

(5) கரமொன்றுபொன்வளை கலீரென்னமாறுது
கங்கணத் தொனிபுலம்பக்
காந்தளம்போதெனக் காதலஞ் சேப்பநற்
கணையாழி விரலழுந்தச்
சிரமுஞ்சடாடவியு மசையவெண்ணிலவோடு
தெண்ணிலவு மூரல்காட்டிச்
சிவனுஞ்சபாசென்ன வுமையவள் சரோருகச்
சித்தங்களிக்க வேதன்
னுரமுந்திடுக்கென்ன வாணிநெஞ் சஞ்சவா
னும்பர்கோ னூழிகாலத்
தருமேறிதாமென்ன விண்ணவர் நடுங்கவே
யொருதரத் தீரிரண்டு
ரமுங்கணீரிடக் குட்டுமொரு செங்கையாற்
சப்பாணிகொட்டியருளே
தங்கமலைநிகரான துங்கமலை யாதிபதி
சப்பாணிகொட்டியருளே.

(6) மீன்கொண்டிரங்குந் தரங்கஞ் செறிந்தமணி
வேலையினில் வேலையிட்ட
மெல்விரற்கையாற் க்ரவுஞ்சகிரிதூளிபட
வேலெறிந்திடு கரத்தால்
வான்கொண்டதேவர் மாரகனுனதாரகனே
மறலிக்களித்த கையால்
வாரணத்தொகுதிகட வாரணத்தூற்றுமத
வாரணம் பொருகரத்தா
லான்கொண்ட தேவுக்கு மீன்கொண்டதேவுக்கு
மபயங்கொடுத்தகையால்
ஐயானனத்தெவ்வை யாறுனனங்கொண்
டடர்த்திடுமெணிக்கரத்தால்
கூன்கொண்டபிறையெயிற் றசுரனைத்தெறுகையால்
கொட்டியருள் சப்பாணியே
கொண்டலம்புகழ்பருகு குன்றையம்பதிமுருக
கொட்டியருள் சப்பாணியே.

வேறு.

(7) ஏலமலர்க்குழல் வான்மதிபெற்றவ
கொட்டுக சப்பாணி
யேரகமேவிய தாரகமாரக
கொட்டுக சப்பாணி

சோலைமலைப்பதிமேவியவித்தக
கொட்டுகசப்பாணி
சுந்தரவள்ளி மணந்தருளையக
கொட்டுகசப்பாணி
ஞாலமளித்தவன் மேல்விருதிட்டவ
கொட்டுகசப்பாணி
நந்தமுலாவு பரங்கிரிவாழ்குக
கொட்டுகசப்பாணி
கோலமயிற்பரி மேல்வருவிக்ரக
கொட்டுகசப்பாணி
குன்றைப்பதிவளரண்டர்க்கதிபதி
கொட்டுகசப்பாணி.
(8) சிங்கமடர்ந்திடு துங்கமலைக்கிறை
கொட்டுகசப்பாணி
தேனுறுடையவ வானோரருள்பவ
கொட்டுகசப்பாணி
சங்கரிபெற்றருள் மங்களவிக்ரக
கொட்டுகசப்பாணி
தாமப்புயமலி நேமத்ததிபதி
கொட்டுகசப்பாணி
புங்கவராகிய சங்கரபாலக
கொட்டுகசப்பாணி

பொன்றொடெனவளர் நன்றொடுடையவ
கொட்டுகசப்பாணி
குங்குமவெற்பணி தங்குதிரட்புய
கொட்டுகசப்பாணி
குன்றைப்பதிவளரண்டர்க்கதிபதி
கொட்டுகசப்பாணி.

(9) இருமயின்மோகன வொருமயில்வாகன
கொட்டுகசப்பாணி
யெண்ணியவேலையி னண்ணியவாரண
கொட்டுகசப்பாணி
யரிமருமகனென வருசரவணபவ
கொட்டுகசப்பாணி
யக்கரமாறுளகுக்குடகேதன
கொட்டுகசப்பாணி
முரசொலிதரவரு மமருலகுடையவ
கொட்டுகசப்பாணி
முருகுகடம்பலர் பெருகுதடம்புய
கொட்டுகசப்பாணி
குருபரனெனவுல கிணையடிபணிமுதல்
கொட்டுகசப்பாணி
குன்றைப்பதிவளரண்டர்க்கதிபதி
கொட்டுகசப்பாணி.

வேறு.

(10) திங்கண்முக மடவார்க ளரிருசெவிக்குமே
தேன்மழை சொரிந்ததென்னச்
செங்கண்மாலின்னமுஞ் செவிவேண்ட நான்முகத்
தேவுமென் செவிபுதைப்பக்
கங்கையணிவார் செவிகள் பத்துக்குமேதேவ
கானவொலி கானவொலியாய்க்
கைக்கவாரணமுகத் தரசுதழைசெவிமதங்
கரைபுரண்டோட வெங்கட்
பொங்கராவின்கண பணாடவிக்கட்செவி
புதைப்பவிமையோருமகிழப்
போராடவருநிருதர் செவியெலாஞ்செவிடிடப்
புருகூதனஞ்சலிக்கச்
சங்கரிதிருச்செவிக் கமுதமெனவொலிதரச்
சப்பாணி கொட்டியருளே
தங்கமலைநிகரான துங்கமலையாதிபதி
சப்பாணி கொட்டியருளே.

சப்பாணிப்பருவமுற்றும்.



## ரு. முத்தப்பருவம்

(1) மந்தரஞ்சுழலாது வாசுகியுடம்பெலா
மற்றுந் தழும்புறாது
வானவர்கள்கரதலங் குருதிசேராதவுணர்
வன்கையுஞ் சேப்புறாது
சுந்தரமிகுந்திடு முகுந்தனரவிந்தநிகர்
துணைவிழி பிதுங்கிடாது
சொரிதரளமெறிதிரை சுருட்டுபொற்கடலகடு
சுற்றுங் கலங்கிடாது
கந்தரத்தினிலெங்கள் கண்ணுதலையின்னமுங்
காலவிஷமே தொடாது
கையொன்றிலேயொன்று வளைதொட்டவர்க்குவளை
கையிரண்டுந் தொடாது
செந்துவர்க்கனிவாயி னமுதம்பெருக்குநின்
றிருவாயின் முத்தமருளே
செங்கண்மான்மருகனே குன்றைவாழ்முருகனே
திருவாயின் முத்தமருளே.

( 2) சரணமெனவந்தவர்க் காதாரமானவிரு
சரணமுங் கூப்பிவேழச்
சருமமுமுடுத்திவெம் புலியதளுடுத்திமுன்
றுணையு மொடுக்கிநாகா

பரணமுங்தாழா தெடுத்துச்சுருட்டியிரு
பங்கயக்கைகள்கட்டிப்
பரிவர்த்தனைக்கால மாமென்னமான்மழுப்
பக்கத்தி லங்கமூன்றுங்
கிரணவெண்பிறையுங்கடுக்கையுமுழுங்குபா
கீரதியும்வீழ்வ தென்னக்
கிளர்தலைகுனிந்தைந்துவாயும்புதைத்தமா
கேசன்றிருச்செவிக்குட்
டிரணமெனவமுதெழும் ப்ரணவத்தினுரைசொன்ன
திருவாயின்முத்தமருளே
செங்கண்மான்மருகனே குன்றைவாழ்முருகனே
திருவாயின்முத்தமருளே.

(3) விண்டலத்துயர்விந்த கிரிதனையடக்கியகை
விரலெலாந் தரையில்வைத்து
மேதினிவணங்கவே பொதியமாமலைதனின்
மிதித்தகால் விரலையூன்றி
மண்டலம்புனையாடை யென்னவளைகடலுண்டவ
மணிவாயுமௌனமாக
மறையவர்களுயிர்கொண்ட வாதாவியுயிருண்ட
வயிறெலாம்புழுதிதோயக்
குண்டலங்கீழ்விழச் செவிதாழவிருகரங்
கூப்பித்தரம்புரட்டிக்

குவடனையவிருபுயமு மார்புமலர்விழியுமே
குவலயத்தூடழுந்தத்
தெண்டனிடுகுறுமுனிக் குபதேசமதுசொன்ன
திருவாயின்முத்தமருளே
செங்கண்மான்மருகனே குன்றைவாழ்முருகனே
திருவாயின்முத்தமருளே.

(1) வானுண்டுகடலுண்டு திடருண்டுகரியுண்டு
மலையுண்டு திசையுண்டுமா
மண்டலமுமண்டமகி ரண்டநவகண்டமும்
வாளரவுமுண்டுமற்றுந்
தானுண்டடங்காத கள்ளப்பசிக்கிபந்
தன்பசிக்கிட்டசோளந்
தானென்னமானென்ன மீனென்னமலர்விழித்

கானுண்டுமலையுண்டு மலையுண்டுமரிதென்று
கருதாதுகாமவலையிற்
கட்டுண்டுகிழவுருக் கொண்டுவயிறெக்கிமுன்
காட்டியவ் வள்ளியிட்ட
தேனுண்டதினைமாவை யுண்டுதேக்கிட்டநின்
றிருவாயின்முத்தமருளே
செங்கண்மான்மருகனே குன்றைவாழ்முருகனே
திருவாயின்முத்தமருளே.

(5) மன்னுநன்புனன்மூழ்க வருவோர்கடங்கெலா
மாருதத்தூதர்விட்டே
வழிப்பறிபறித்துத் தரங்கக்கரங்களான்
மங்கலமெடுத்தெறிந்து
சந்நிதானத்தில்வரு வோர்ஜன்மநோய்க்கெலாந்
தண்டுளிமருந்தளித்துச்
சாலோகமுந்தந்து சாமீபமுந்தந்து
தண் புனல்படிந்தபேர்க்குப்
பன்னிருகரங்களும் பன்னிருபுயங்களும்
பன்னிருமலர்க்கண்களும்
பன்னிருவர்போன்மகர குண்டலமிலங்குகுழை
பனிரண்டுமூவிரண்டு
சென்னியுந்தரு சரவணப்பொய்கையாதிபா
திருவாயின்முத்தமருளே
செங்கண்மான்மருகனே குன்றைவாழ்முருகனே
திருவாயின்முத்தமருளே.

(6) அவ்வென்றுபடருங் கதிர்க்கற்றைதோயவிண்
ணூர்ந்துசூற்கொண்டகொண்மூ
வளித்தவெண்முத்துந் துளித்திவலைவேண்டியங்
காந்தநத்தீன்றமுத்துந்
தெவ்வென்றுசிங்கத் திளங்கன்றெழும்பிச்
சினத்துத்தகர்த்தொடித்த

சிந்தூரக்கோட்டிற் றெறித்தவெண் முத்தமுஞ்
செங்கரும்பீன் றமுத்துஞ்
சவ்வென் றதுளையுண்டு விலையுண்டுகடையுண்டு
தட்டுண்டுதிரியுமல்லால்
தண்டளிபெருக்குநின் மழலைவாய்முத்தெனத்
தருமின்பமருளவருமோ
செவ்வென் றுமதுரித்து நறுமணம்பூரித்த
திருவாயின்முத்தமருளே
செங்கண்மான்மருகனே குன்றைவாழ்முருகனே
திருவாயின்முத்தமருளே.

(7) முளைத்துக்கிளைத்திலைகள் பச்சப்பசேரென்று
மூதண்டமுகடுமுட்ட
மூவுலகளக்கவரு நெடியமாலெனவளரு
மூங்கிற்குமூரத்தினின்பம்
விளைத்துப்பிறந்தவெண் முத்தமுஞ்சரசமும்
விரும்பிலோர்வெடிவுமாற
வேரிப்பசும்பொற் செழுங்கமலநெட்டிதழ்
விரிந்தவெண்முத்துமேங்கிக்
களைத்துத்திகைப்பநேர்ந் தஞ்செய்தொளி கான்றிடுங்
கையேறவகடுகிழியக்
கடன்முகட்டிணிலெழுந் துலகமொருமூன்றினுங்
கதிர்வீசுநன்முத்தமுங்

துளைத்துவிலைகட்டமியிர் கட்டாணிமுத்தமே
சுடர்வாயின்முத்தமருளே
சோதிமலைசிகரான தோகைமலைபாதியா
சுடர்வாயின்முத்தமருளே

வேறு.

(8) அருகிருக்கும்பரிசடத்தும்
அரசன்முத்தந்தருகவே
அரைவடக்கிண் கிணியொலிக்கும்
அழகன்முத்தந்தருகவே
ஒருகிரிக்கங்கயில்விடுக்கும்
உசிதன்முத்தந்தருகவே
உபயபத்மந்தருமெனக்கும்
ஒருவன்முத்தந்தருகவே
தருகடப்பந்தொடை தரிக்குஞ்
சரசன்முத்தந்தருகவே
தமிழுமைக்குஞ் சரநதிக்குந்
தனையன்முத்தந்தருகவே
குருகிரிக்குங்குறமயிற்குங்
குரிசின்முத்தந்தருகவே
குறைவறக்குன்றையிலிருக்குங்
குமரன்முத்தந்தருகவே.

வேறு.

(9) தாயென்றெடுத்துத் தடம்புயஞ்சேர்க்கவொரு
தவமதனை வன்னியுடைய
சன்னிதானஞ்செய்து வேள்வியாகுதியவன்
றன்பேரிலேகவர்ந்து
போயென்றுமிருமென்று முனிவரிருமூவரும்
புணருமடவாரையகலப்
பொற்கொடிகளிருமூவ ரொமதுவடிவாயன்பு
பூண்டனம்வன்னியதனல்
ஆயென்றுயாமுன்னை நம்பிவந்தோமென்ன
வபயங்கொடுத்துவானில்
ஆகண்டலன்மகிழ வறுமீனெனப்பதித்
தவர்முலைப்பாலுமுண்டு
சேயென்றுமணிமார்பில் விளையாடுமொருபிள்
திருவாயின்முத்தமருளே
செங்கண்மான்மருகனே குன்றைவாழ்முருகனே
திருவாயின்முத்தமருளே.

வேறு.

(10) சுடர்முகக்குஞ்சரமுகத்தன்
றுணைவன்முத்தந்தருகவே
சுரர்பதிக்கன்றரசளிக்குஞ்
சுகுணன்முத்தந்தருகவே

வடதருக்கொம்புறையரிக்கும்
மருகன்முத்தந்தருகவே
வடகிரிக்குன்றினிலிருக்கும்
மதலைமுத்தந்தருகவே
கடலடக்குங்கொடிசெலுத்துங்
கடகன்முத்தந்தருகவே
கரதலக்கங்கணமொலிக்குங்
கடகன்முத்தந்தருகவே
கொடியிரிக்குங் குறமயிற்குங்
குரிசின்முத்தந்தருகவே
குறைவறக்குன்றையிலிருக்குங்
குமரன்முத்தந்தருகவே.
முத்தப்பருவம் முற்றிற்று.

## ௬. வருகைப்பருவம்.

(1) ஞாலம்படியும்விரற்காழி
நல்கவருகமதகயம்போல்
நடந்துவருகவொருமாற்றம்
நவிலவருகவிளங்குதண்டைக்
காலன்வருகவெனதிருகண்
களிக்கவருகவிழிக்குமலர்க்

கண்ணே வருக மணியரைஞாண்
கட்ட வருக வுமையவடன்
பாலன் வருக நடந்தநடை
பார்க்க வருக நுதற்றிலதம்
பதிக்க வருக மழலைமொழி
பகர வருக வெவர்க்குமனு
கூலன் வருக தேனூற்றுக்
குரிசில் வருக வருகவே
குன்றக்குடியில் வீற்றிருக்குங்
குமரா வருக வருகவே.

(2) தேனே வருக வமரர்தொழுந்
தேவே வருக முத்துவடஞ்
சேர்க்க வருக விழிகளின்மை
திருத்த வருக வரிக்குமரு
மானே வருக மயிலேறும்
வள்ளல் வருக வள்ளிமண
வாளன் வருக வானவர்கோன்
மருகன் வருக நடந்தோடித்
தானே வருக வேலெறிந்த
சமர்த்தன் வருக கடாநடத்துஞ்
சதுரன் வருக வசுரர்பகை
தாண்ட வருக சிகண்டிமலைக்

கோனேவருக தேனூற்றுக்
குரிசில்வருகவருகவே
குன்றக்குடியில் வீற்றிருக்குங்
குமராவருகவருகவே.

(3) பூவேவருகபூவினறைப்
பொலிவேவருகப்பொலிந்தமலர்ப்
புயவேள்வருக புயலொதுங்கும்
பொழிலேவருக பொழிலினிராங்
காவேவருக காவினறுங்
கனியேவருகக் கனிந்தரசக்
கரும்பேவருக கரும்புருவக்
கண்ணேவருக கண்ணனுக்குந்
தேவேவருகத் தேவர்சிறை
தீர்த்தோன்வருக தீர்த்துகந்த
செவ்வேள்வருக செவ்விதழ்சேர்
சேயேவருக சிகண்டிமலைக்
கோவேவருக தேனூற்றுக்
குரிசில்வருக வருகவே
குன்றக்குடியில் வீற்றிருக்குங்
குமராவருக வருகவே.

(4) மாமானுதவு மொருமயிலை
மணந்தோர் மாலையிடவருக

வானோர்சிறையின் மயங்காமன்
மதவாரணத்தைப் போல்வருக
காமாநலஞ்சே ரிபமடந்தை
கரபங்கயத்தைத் தொடவருக
கவிக்கேயிரங்கி நக்கீரர்
கடியசிறையை விடவருக
நாமான்கொழுந னறியாத
நலஞ்சேர்பொருளைத் தரவருக
நாட்டுக்குயர்ந்த வளர்நேம
நாடன்வருக சிகண்டிமலைக்
கோமான்வருக தேனூற்றுக்
குரிசில்வருக வருகவே
குன்றுக்குடியில் வீற்றிருக்குங்
குமராவருக வருகவே.
(5) வண்டல்படியுஞ் சுரநதிதன்
மதலைவருக மதம்பெருக்கு
மதவாரணத்தி னிளவலெனை
வாய்த்தமயிற் சேவகன்வருக
அண்டர்பணிக்குக் குடமுயர்த்த
வதுலன்வருக வெனையாளும்
ஐயன்வருக மெய்யிலகும்
அண்ணல்வருக விண்ணுயர்கோ

தண்டன்வருககடப்பமலர்த்
தாமன்வருக வறுகோணச்
சக்ரன்வருக வாறெழுத்துத்
தலைவன்வருகசிகண்டிமலைக்
கொண்டல்வருகதேனுற்றுக்
குரிசில்வருக வருகவே
குன்றுக்குடியில் வீற்றிருக்குங்
குமராவருக வருகவே.

வேறு.

மேனுள்வரும்பகைக் காற்றுதநெஞ்சமொடு
மிக்ககவு சிகனும்வெருள
விரிமலர்க்கோகநகமேவுநான்முகன்மகன்
விரும்பியே யருள்செய்குவான்
கூனுரிளம்பிறை யெயிற்றரக்கனையாவி
கொல்லவர வடுபழிக்குக்
குருகுலத்தவர்சரிதை குறுமுனிமகிழ்ந்துடன்
கூறிடக் கோபமுனிவன்
வானுமெகிழவே திருதமாரணவேள்வி
மற்றும் மியற்றவங்கோர்
மறைமுனிதவிர்த்துவளர் கவுசிகன்மேல்விடவ
மறையவன் சரணமெனவே
தேனுணமதுரமொழி சொல்லியஞ்சேலென்ற
தேவநாயகன் வருகவே.

திமிரதினகரன்வருக வமரர்தளபதிவருக
குமரகுருபரன் வருகவே.

(7) நிருதரிரிதரவருகவமரர்சிறைவிடவருக
நிமலன்மன மகிழவருக
நிகிலமறைதொழவருக மறையவன்வெருடவருக
நினதுநடை பயிலவருக
வொருவன்முதுகினில்வருக வரிசைமயின் மிசைவருக
வுமையவடன் மதலைவருக
வுலகமகிழ்தரவருக வரதன்மருமகன்வருக
வுபநிடத முதல்வன்வருக
விருவிழிமையிடவருக வரிவளைகடொடவருக
வினியமொழி பகரவருக
விலகுமறுமுகன்வருக நுதல்வெயர்வுதரவருக
விபவுதநனிள வல்வருக
குருகிரியிலரசுபுரி மதுநதிமணவன்வருக
குலதிலக முருகன்வருக
குடகர்கருநடர்பரவு விகடமயின்மலைமருவு
குமரகுரு பரவருகவே

(8) அண்டர்மனைவியரணியு மங்கிலியம்வளரவளர்
ஐந்துமுகன் மதலைவருக
வன்றசுரர்பொருமணியி லிந்திரனுமபயமென
வஞ்சலெனு முருகன்வருக

மண்டலமுமெழுகடலு நின்றவடவரையுமொலி
மண்டுமயின் முதல்வன்வருக
மங்கையர்கடொழுமமர குஞ்சரிமினிடுகளப
மஞ்சரிகொள் கணவன்வருக
தண்டமிழினிசைபழகு சங்கமதிலொருவனிசை
தந்ததமிழ் புனையவருக
சந்தமிகுமருணகிரி செந்தமிழினுடனிலகு
தங்கவட மணியவருக
கொண்டல்படிதருநெடிய தென்றலொடுபொழிலிலகு
குன்றைநக ரதிபன்வருக
குடகர்கருநடர்பரவு விகடமயின்மலைமருவு
குமரகுருபரன் வருகவே.

(9) தஞ்சமெனமருவுகுற வஞ்சியின் முலைமுனைக
டங்குபுயமுருகன்வருக
தண்டையுடனொலிகுமுறு கிண்கிணியுமொளிபெருகு
தண்டரளமணியவருக
வஞ்சமிடுமசுரர்படை நெஞ்சுபறையறையவடு
வன்கையயிலெறியவருக
மங்கையர்கண்மயறணிய நின்றவர்கண்மிடிதணிய
வந்து க்ருபைசொரியவருக
விஞ்சையர்கள்புடைபெருகு துங்கமலைதனிலுலவு
வெங்களபமதலைவருக

விம்பவிதழுழுகுசொரி கின்றதுளிபெருகிநிறை
மிஞ்சுநதிபெருகவருக
கொஞ்சுகிளியொடுபழகு தண்டலைகள்புடைபெருந்
குன்றைநகரதிபன்வருக
குடகர்கருநடர்பரவு விகடமயின்மலைமருவு
குமரகுருபரன்வருகவே.

(10) திங்கண்முடிமருவுகிர வுஞ்சகிரிதகரவொரு
செங்கையயிலெறியவருகத்
திரைகடலுமரவணையி லரியுமனமறுகியலை
சிதறவயிலெறியவருக
வெங்கணிசிசரர்குருதி கங்கமொடுநரிபருக
விந்தையயிலெறியவருக
விகடமிடுமலகையுட லகடுகிழிபடவொருவன்
வினவுமயிலெறியவருக
துங்கமலைபணிபவர்க டங்கள்வினைதணியவொரு
சொந்தவயிலெறியவருக
சூரர்பணியுமரியையமர் பொருதுமனன்மடியவிசை
தொடருமயிலெறியவருக
கொங்குபயில்நறுமலர்க டென்றலுடனசையவரு
குன்றைநகரதிபன்வருக
குடகர்கருநடர்பரவு விகடமயின்மலைமருவு
குமரகுருபரன்வருகவே.

வருகைப்பருவம் முற்றும்.

---

## எ. அம்புலிப்பருவம்.

வேறு.

(1) எண்டிசைவிளங்கவே யத்திரிலோசனமீதி
லெழுதலான்முழுதுமலைவா
யிருந்துற்பவித்தலாற் புகர்முகத்தழைசெவி
யிபத்துடன்றோன்றிவரலான்
மண்டலந்தனிலெவரும் வந்துதொழுமகிமையால்
வளருமறுமுகமுள்ளதால்
வானவர்க்கமுதங் கொடுக்குந்திறத்திறன்
மருவுகுவலயமகிழ்தலால்
ஒண்டிறற்கார்த்திகைப் பெண்கண்மனமகிழவே
யுவகைதரலாலவனிமே
லொய்யாரவல்லித னிடத்தின்புசெய்தலா
லொளியினலிரவொழிதலால்
அண்டர்நாயகனுடன் சரிசொல்லலாமுனையு
மம்புலீயாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனோ
டம்புலீயாடவாவே.

(2) பமர்மிடுகடலகடு மறுகக்கலக்கும்
பணைப்பொற்றிருக்கரத்தாற்
பாரகிரியுங்கண்ட போதுடலமுருகிப்
பயப்படச்செய்யும்வடிவால்

சமரபிடுசிங்கமுங் கீழ்ப்படக்கடகந்
தரிக்குந்திருச்சிறப்பால்
சக்ரவாளக்கிரியும் வடவரையுமொருகணந்
தனிலேவலஞ்செய்கையால்
நமரனுடனுமையவளு மிதயமகிழ்தருசிரோ
ரத்னமெனவேவருதலால்
நாடொருங்கலையா னிரம்பலால்வாரமெந்
நாளுமகலாதவெழிலா
லமரர்நாயகனுடன் சரிசொல்லலாமுனையு
மம்புலீயாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனொ
டம்புலீயாடவாவே
(3) ஓகையாலிருசிறை யடித்துநெட்டுடலமங்
குதறியே பதறிவானுட்
டும்பருஞ்செவிடடப் பகுவாய்திறந்துநெட்
டொலிகொண்ட குக்குடப்பூந்
தோகையாடிடவுனது திருவீதிநீவந்து
தோன்றுவெண் பாற்கடலுமே
சூழப்புலிங்கக் கடுங்கனற்பொறிசிந்து
சுடர்வேலு மிழ்ந்ததெண்ணீ
ரீகையாலுயர்குன் றெடுத்தருள்பரஞ்சுட
ரிளஞ்சடை யிவன்கரத்தா

விழுக்கவித்துருமத் திளங்கொடியிதாமென்ன
விலகுமொரு வாகுபுரிவா
யாகையாலிவனன்பு வேண்டிமுத்தையனுட
னம்புலீ யாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனொ
டம்புலீ யாடவாவே.
கனககிரிரசிதகிரி நிகரானவுதயகிரி
கடினகிரி திரணகிரியாம்
கபடகிரியாகிய க்ரவுஞ்சகிரிகிர்த்தூளி
கண்டதே சாட்சியன்றோ
தனகனகவஸ்துவா கனபூஷணப்ரபல
சௌபாக்கியமே நிறைந்து
தருசுதாமண்டலமும் விண்டலவிமானமுந்
தண்டாதுயர்ந்து பாரிற்
பனகனுடனெளியமயி லெனவடிவுபெறுசூர
பத்மனுள மகிழவந்த
பாரமாமேருவெனும் வீரமாகேந்த்ராபுரி
பட்டபா டறியாததோ
அனவரதமிவனுறவு வேண்டிமுத்தையனுட
னம்புலீ யாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனொ
டம்புலீ யாடவாவே.

(5) பாதளாலயணா அசுரேந்த்ரன்மகளுதவு
பாலகன் சாளரத்திற்
பதித்துக்கதிக்கின்ற கண்ணாடியெனவைத்து
பாரவன் சிறைவிடுத்தான்
ஈதலான்மூவொன்ப தானமனைவியரிலோ
ரேந்திழை வணம்புகுதவே
இதயங்கலங்குநின் சஞ்சலந்தீரவே
யிருமூன்று மனைவிதந்தான்
காதலால்வளர்சிகா மணியென்றுவைத்துனைக்
கதிரொளியி னான்மழுங்கிக்
கலைகண்டகலைதன்னை நிலைகண்டகலையெனக்
கருணாகடாட்சம் வைத்தான்
ஆதலாலிவனுறவு வேண்டிமுத்தையனுட
னம்புலீ யாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனோ
டம்புலீ யாடவாவே.

(6) தொல்லைப்பெருங்கிரிகள் சுற்றியலையாமலே
துருவபத மும்மளிப்பான்
சுந்தரமிருந்தவுட லந்தனிலிருந்திருள்
சுரந்தமறுவுந் தொடைப்பான்
செல்லைப்புகழ்ந்திடு சிகண்டிக்குநின்பகைச்
செம்பாம்பு பழிகொடுப்பான்

தினமுமுனதுடலருந் தாதுதேவர்க்குநகை
செய்துகிள்ளாக்கையருள்வான்
எல்லைப்பொரும்படிக் குனதுகிரணங்களுக்
கினிதான சுடரளிப்பான்
இருபட்சமும்வளரு மொருபட்சமேபோல
இன்பமொடு பட்சம்வைப்பான்
அல்லைப்பொருங்குழலி வல்லிக்குவாய்த்தவனொ
டம்புலீயாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனொ
டம்புலீ யாடவாவே.

கஞ்சமலராகுமுன் னெஞ்சம்பகீரெனக்
கதிர்வேன் முனைக்களிப்பான்
கடியசேவற்கொடிக் குன்னைநவநீதவெண்
கவளமெனவே கொடுப்பான்
கொஞ்சுமயிலுக்குனது நெஞ்சம்பிளந்துயிர்
குடிக்கக் கொடுப்புனதனாற்
கோரநவவீரர்க்கு வீரவெண்டயமெனக்
குழைகழற் றளிலணிவான்
வஞ்சியர்களபரஞ்சி மலையில்வளர்குறவஞ்சி
மணவாளன் வரவழைத்தால்
வந்துவிளையாடாமல் வாராதிருந்தவுன்
மதியென்னமதிமதியமே

அஞ்சலென வபயங் கொடுக்குமென்னையனுடன்
அம்புலீயாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனொ
டம்புலீ யாடவாவே.

(8) கையின்வடிவேலுக்கு னுடலத்தையேவெள்ளி
கட்டவே தகடடிப்பான்
காதிற்குமுருகுமுத் தாமென்றுசேவலிற்
கட்டிவிளை யாடவருவான்
பையவேமயிலுக்கு மூக்குத்திமுத்தென்று
பார்த்துனுடலந் துளைப்பான்
பாரவெங்கோட்டுக் கிடாய்க்குச்சிலம்பென்று
பாதத்திலே யணிகுவான்
மையலுடன்வருதெய்வ யானைக்குமாலையிடு
மணவாளன் வரவழைத்தால்
வாராதிருப்பதுவும் ஆச்சரியமேயுனது
மதிமோச மதமல்லவோ
ஐயமில்லாமலென் னையனுடனேதினமு
மம்புலீ யாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனொ
டம்புலீ யாடவாவே.

(9) நிச்சயமதாகவே மித்திரன்மறைந்திட்
நிலாக்களை விளங்கவந்தும்

ங்ரோகணிப்பெண்ணினாற் சயரோகமுங்கொண்டு
    நிசரோகி யாயிருந்தும்
இச்சையொடுபிறர்மனை நயந்துகுடிலத்தோரு
    மெந்நாளுமே வளர்ந்தும்
இதயபரிசுத்தமில் லாமலந்தக்கரண
    மென்றுங் களங்கமுற்றுஞ்
செச்சைப்புயத்திளவல் விளையாட வாவென்று
    திருவுளமுனக் களித்தால்
சென்றுடுதீர்த்தமது வந்தாடினேனென்று
    சென்னிகுவி யாததென்னே
அச்சப்படாமலென தையனுடனே தினமும்
    அம்புலீ யாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாதிபனோ
    டம்புலீ யாடவாவே.

(10) துங்கமலைமீதினி லிலங்குபொற்கோட்டினிடை
    தோற்றலா மமுதூற்றலாந்
தூய்யபாற்கடலென்ன வளர்சரவணப்பொய்கை
    சூழவே விளையாடலாம்
பங்கயில்லாததே னூற்றினிருளையெலாம்
    பழகிய நிலாவீசலாம்
பாண்டிநன்றுபுகழ் நேமநாட்டவொலாம்
    பார்க்கவே தீர்க்கமுறலாம்

சங்கமெங்குங்குலவு குன்றுக்குடிக்குள்வளர்
சாளரத்தினி னுமைழயலாம்
சண்முகக்கடவுளுடன் விளையாடலாகித்திய
சாம்ப்ராச்சிய முடன்வாழலாம்
அங்கசன்மனமகிழ மேல்வட்டமாகிவளர்
அம்புலீ யாடவாவே
அகண்டவடிவாகிய சிகண்டிமலையாநிபனெ
டம்புலீ யாடவாவே.

அம்புலிப்பருவம் முற்றும்.

## அ. சிற்றிற் பருவம்.

வேறு.

(1) கடவாரணமா முகத்தவுணன்
கடும்போர்துளைத்துப் பொருதிரண
களத்திற்புகுந்து மருப்பிவரக்
கதிக்குந்தரளம் பிரித்தெடுத்து
மடவார்கூடி மனைவகுத்து
மலையவளைச்சங் தனக்குறடு
வாய்த்தமணிநீர் வார்த்தரைத்து
வழித்துநிறைசங் தனக்குழம்பிற்
படவாளரவின் முடிதாங்கும்
படிமேல்விளங்க நிலம்புசி

பதுமத்தரசி யெனுமாதர்
பரிவாய்க்கூடி விளையாடுந்
திடவாரணத்தி னுடன்பிறந்த
தேவேசிற்றிற் சிதையேலே
திகண்டிமலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வாசிற்றிற் சிதையேலே.

(2) தாங்கும்புலிக்கோ ராடையெனத்
தவமாமுனிக்கு மணவாகத்
தயங்கும்பாரா வாரமுன்னாட்
டானேசுவற வேலெறிந்து
நீங்குந்தம்புனலாற் குடவளைக
ணிலமேல்லாதுங்க மரகதத்தால்
நிறைத்தவடுப்பின் மிசையேற்றி
நினதாகித்தே னுலைவார்த்து
வாங்கும்வயிரப் பொடியதனை
மறுப்பார்த்தெடுத்துக் களைந்தரிசி
வாகாப்புகட்டி நின்றாட்டு
மடவார்கூடி விளையாடுந்
தேங்கும்புகழ்சேர் குன்றைநகர்த்
தேவேசிற்றிற் சிதையேலே
சிகண்டிமலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வாசிற்றிற் சிதையேலே.

(3) கதறுமவுணர் நிரைந்தோடக்
கலங்குமாயா புரியழித்த
காலத்தவர்மா னிகைப்பவளக்
காலேயவர்க்குத் தனயாகப்
பதறுமசுர மடமாதர்
பரிக்குந்திருமங் கலப்பூணிற்
பதிக்குநாயக மணியாம்
பசுர்மாணிக்க மிருட்பிழம்பை
உதறும்படிக்குக் ககனமணி
யொளிசேர்தூண்டா விளக்கெனவே
யுயிரோவியம்போன் மடமாதர்
உளையேயடுத்து விளையாடும்
சிதறுந்தரங்கத் தேனுற்றுத்
தேவேசிற்றிற் சிதையேலே
சிகண்டிமலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வாசிற்றிற் சிதையேலே.
(4) கூட்டுந்தரங்க மிரங்குதெண்ணீர்க்
குளிர்தேனுற்றி னீராடிக்
கூந்தல்விடுத்துத் திலதமிட்டுக்
குவளைவிழிக்கஞ் சனமெழுதிப்
பூட்டுமணிகள் பலவணிந்து
பூம்பட்டாடை விரித்துடுத்துப்

புகலுங்களபங் கமகமெனப்
பூசித்தாள வடம்பூண்டு
சூட்டுமலர்மாலிகை தரித்துத்
துலங்குங்கழங்கம் மனையெறிந்து
சுரும்பாரரும்பு கறிதிருத்திச்
சுடுசோறாக்கி விளையாடுந்
தீட்டுந்திலத நுதற்குமரா
சிறியோர்சிற்றிற் சிதையேலே
சிகண்டிமலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வாசிற்றிற் சிதையேலே.

வருமோகார கிரிசூழ
வலமாய்நடந்து பூங்காவின்
மலர்பூப்பறித்து மலையேறி
வனசமலர்த்தாண் மிசைசொரிந்துங்
குருமேறெனவே யெதிர்த்தடரு
மொருவேல்பாடி மயில்பாடி
யுபயமடமா னடிகடொழு
துனதாறெழுத்துங் கருத்தில்வைத்துத்
தருமேனியில்வெண் ணீறணிந்துன்
றனையேதுதித்துச் சிறுசோறுன்
றனக்கேபடைத்துத் தனித்தனியுன்
றாளேவணங்கி விளையாடுங்

திருமேனியிலும் புழுதிபடச்
சிறியோர்சிற்றிற் சிதைகையிலே
சிகண்டிமலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வாசிற்றிற் சிதையேலே.

(6) வானத்தவுண ரெதிர்த்தடர
வரும்பாளையமோ மலர்த்தாளில்
வணங்காநிருதர் படைவீடோ
மாயாபுரிக் கொத்தளமீதோ
கானக்குறவர் பசுங்குடிலோ
களிக்குங்குறத்தித் தினைப்புனத்தையுங்
காக்கும்வேலித் திறமீதோ
கதிக்குங்க்ரவுஞ்ச கிரிநாதனே
ஞானத்தவர்க டமைமயக்கி
நாளும்பிறப்புக் கிடமாக்கி
நலியும்வலிய வினைப்பயனே
நளினமலர்த்தா ளாலழிக்க
ஆனைக்கொருகே சரியான
அரசேசிற்றி லழியேலே
அகிலம்பரவுந் துங்கமலைக்
கரசேசிற்றி லழியேலே.

(7) நிலஞ்சேர்மாட்டுக் குளப்படியி
னீர்போலிறைத்து விளையாடு

நீலக்கடலின் புனலிதுவோ
நினதுமலர்த்தாள் வணங்காத
குலஞ்சேர்வீர மாகேந்த்ரக்
கொடியநகரோ சிங்கமுகன்
கொலுவீற்றிருக்கு மண்டபத்தின்
கொடுங்கையில கு மணிமுகப்போ
பொலஞ்சேர்கிரியும் இமையவெற்பும்
பொருந்தும்படிக்குக் கழங்கெனவே
பூட்டித்தெறிக்கும் மலையிதுவோ
புகலும்பதுதா னீயழிக்க
அலஞ்சேர்கரத்தான் மருகனென்னு
மரசேசிற்றி லழியேலே
யகிலம்பரவுந் துங்கமலைக்
கரசேசிற்றி லழியேலே.

(8) தரிக்குமமரர் சிறையிருக்குஞ்
சாலையிதுவோ நக்கீரன்
தமிழுக்கிரங்கிச் சிறைவிடுத்த
தலமாமலைக் குகையிதுவோ
விரிக்குமிலங்கா புரிக்கோட்டை
மேலைவாயிற் படியிதுவோ
வேலைக்கொரு வேலியுமாக
விளங்குமெழுதீ வோவருணன்

கிரிக்குமனச்சஞ் சலந்தீர்த்துன்
கிருபையளிக்கு முன்றனிற்
கிளைக்கும்வினையோ வனசமெனக்
கிளரும்பதத்தா னீயழிக்க
அரிக்குமருமை மருகனெனு
மாசேசிற்றி லழியேலே
அகிலம்பரவுந் துங்கமலைக்
காசேசிற்றி லழியேலே.

(9) சரணமெனவே வந்தடைந்த
தவஞ்சேர்முனியாங் கவுசிகன்மேற்
றுணைநடத்து முனிவேள்வித்
தலமோசமணர் குடியிருப்போ
வரணமெனவே யவர்விடுத்த
வனலோமதுரைக் கரசன்மிசை
யங்கந்துளைக்குஞ் கொடுஞ்சுரமோ
வாற்றேடேறி வரும்புனலோ
மரணமடையு மருமறையோன்
மங்கையுயிரைக் கவர்ந்தெடுத்த
மறலியுலகோ வனசமெனு
மலர்த்தாள் சிவக்கநீயழிக்கத்
திரணமெனவே மதித்தருள்செய்
தேவேசிற்றிற் சிதையேலே

சிகண்டிமலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வாசிற்றிற் சிதையேலே.

(10) மோக்கக்குழையு மணிசசமலர்
முனிவர்மனத்தி லுறங்கினைத்து
முயங்கக்குழையு முனதுபதமு
முளரிக்கிணையென் பாரறியார்
சாக்கச்சிவக்கு மலர்ப்பதத்திற்
றனித்தூள்பொதியுமணியமுத்துந்
தங்கியோன்மனது சஞ்சலிக்குந்
சகிக்கவறியே மெமைநாளுங்
காக்கவுனக்கே பாரமலாற்
கதிவேறுண்டோ காப்பவனே
காவலழித்தாற் கணக்கேதுன்
கருணையிலங்கக் காலமன்றோ
வாக்கம்பெருகுங் குன்றைநகர்க்
கரசேசிற்றி லழியேலே
யகிலம்பரவுந் துங்கமலைக்
கரசேசிற்றி லழியேலே.

சிற்றிற்பருவம் முற்றிற்று.

---

## ௯. சிறுபறைப்பருவம்.

---

வேறு.

(1) அந்தமுறுகற்பகாலத்திலுருமேறென்ன
வமரர் துந்துமிமுழங்க
அஷ்டாதசத்தொனியு மெட்டானதிசைமுட்ட
வழகு பல்லியமுழங்க
மந்தரஞ்சுழலுநாண் மறிகடன்முழக்கென்ன
வானவர்க ளொலிமுழங்க
மைக்கொண்டவொலியென்னவிமையோர்கள்சிறுநா
ணின், வலியவொலி மிகமுழங்கச்
சந்ததமும்வெந்நிடா வீராதிவீரர்குறி
சங்கநாதமு முழங்கச்
சங்கிராமநாளிட்ட வேதனொடுமுனிவோர்கள்
சதுர்வேத வொலிமுழங்கச்
செந்திருவிளங்குமணி ரதமேறுசிங்கமே
சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
சிறுபறைமுழக்கியருளே.

2) நவகோடிவீரர்வரு மட்டகாசத்தினொ
டெற்றிசைகள் நெடிகலங்க

ரதகசதுரங்கபத சதுரங்கவர்க்கத்தி
　　ஞற்கருங் கடல்கலங்கத்
தவகோடியால்வந்த செயகோடிசாயவே
　　தாரகன் மனங்கலங்கச்
சாயாதபடையான மாயாபுரத்தவுணர்
　　தம்பியிலே கண்கலங்க
அவகோடிபெருமவுணர் புணர்கோடிமடவார்க
　　ளரியகர்ப்பங் கலங்க
ஒருகோடிவருமசுர ருயிர்கோடியலறவே
　　யந்தகன் றிசைகலங்க
சிவகோடியவதார வடிவாகவருமுருக
　　சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
　　சிறுபறை முழக்கியருளே.

(3). எண்டிசைக்குஞ்சரம் பொருபோரடங்கவே
　　யிபமுகன் போரடங்க
விமயாசலத்தில்வரு முனிவோர்தழைக்கவே
　　யீதிபாதைக ளடங்க
வண்டிசையுநந்தா வனஞ்செய்தவும்பர்கோன்
　　மணிவிரற் சேப்படங்க
வருபரங்குன்றின்மலை யிருபரங்குன்றனை*
　　வள்ளிக்கு மாலடங்கத்

தண்டிசையுமொலிகண்டு செந்தூரினலைசிந்து
தண்புனற் கடலடங்கத்
தானவர்கள்சூழச் சிறைக்கூடமுறுசயந்
தன்மனப் பயமடங்கச்
செண்டிசையுமணிவிரற் காந்தளங்கையினாற்
சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
சிறுபறை முழக்கியருளே.

(4) வானாடுதழையவே தூதுசென்றிடுவீர
வாகுநித மஞ்சலிக்க
மலங்காதெதிர்த்திடு மிலங்காபுரத்தசுரர்
வாதாடி வாய்சலிக்க
நீநானெனச்சென்று பானுகோபனும்வந்து
நில்லாது சஞ்சலிக்க
நின்றுமாழ்குறுமவுணருயிர்கவரவிடுபடைக
ணோரான கைசலிக்கக்
காணுறுசூழ்வீர மாகேந்த்ரபுரமேவு
கண்டகன் மனஞ்சலிக்க
கங்கமங்கங்குலவ வவர்மீதிலாடிய
கவந்தங்கள் வாய்சலிக்கத்
தேனூறுபுடைபெறுகு மாயூரகிரிமுருக
சிறுபறை முழக்கியருளே

தேவர்க்குமானுக்கு தேவிக்குநாயகன்
சிறுபறை முழக்கியருளே.

(5) சகடப்படவருந்ருசருடல்கிழியவிளைகுருகி
சளசளென மலையருவிபோற்
றரணிநதிபெருகியிருக்கைபுாளமதகளிறு
தவழுமுடல் விடுபடகுபோல்
விகடபிடுமவுணர்பணி பயிலிரதமொடுபணதின்
மிசையுருள விருதுகொடிதான்
விசையமகள்புளைருகிலைங்கமொழுகவரிபுனைகண்
மிகுமலைகள் பலசிதறவே
யகடுகிழிபடுபுரவி மகரமெனவிருகரையி
னருகுவர நிருதர்முகமே
அளிகள்விழுகமலமலரெனவிசையமகள்கொலு
னலகைசில வடிபணியவே
திகடமதமுகனிருச னுயிர்கவருமதகளிறு
சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுக்கு தேவிக்குநாயகன்
சிறுபறை முழக்கியருளே.
சங்கமுமுழங்கிட நடந்தெதிர்வரும்புரவி
தங்கியதிமிங்கிலமெனத்
தந்திகண்மிதந்துவரு வங்கமெனநின்றெ[illegible]கு
சஞ்சலமிடுங் கவரியா

நஞ்சுரம்பினைச்சிந்திடு பெரும்படகெனும்படி
　　நடத்திடு ரதங்களிலக
நன்குறுபடம்பெறு மரங்களெனவெண்கொடி
　　நடுக்கொடிய கம்பமிலகப்
பங்கமறநின்றுபொருகின்றவர்பசுங்குருதி
　　பைம்புனலி னின்றுவரவே
பண்டுமுனைகொண்டவை மிகுங்குமிழிகொண்டுயர்
　　பசுங்கிடையின் மண்டிவரவே
சிங்கமுகனின்றுபொர வன்றுயிர்கவர்ந்தருக
　　சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
　　சிறுபறை முழக்கியருளே.

(7) கயமன்றுபொருகின்ற விரிகொம்புநெரிகின்ற
　　கதிர்கொண்ட தரளமெல்லாம்
கனிகொண்டுபொரிசிந்தி விழிகொண்டகடைத்
　　கனல்கொண்டு சமிதையாகப்
பயமின்றியடர்கின்ற கணைசிந்திவலம்வந்து
　　படிகின்ற குருதிநெய்யாய்ப்
பகைகொண்டவிருதன்ற னுயிர்கொன்றவவிதந்து
　　பழியென்ற மூளைதெளித்தே
[illegible]மொழிகின்ற வவுணன்றனகரின்கண்
　　நிலைகொண்ட கலைமிதித்தே

# பிள்ளைத்தமிழ்.



நிலமங்கைமலர்மங்கை கலைமங்கைமலைமங்கை
நிசமங்களம்பாடவே
செயமங்கைமணமன்று புரிகின்றமதகளிறு
சிறுபறைமுழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
சிறுபறை முழக்கியருளே.

கொட்டமிடுநெட்டவுணர் கட்கடையுநித்தகனல்
குத்துமொரு மத்தகயமே
கொட்டியமருப்பிடை செறித்தகனலச்சகடு
கொட்புறவுதித்தகனலுந்
தக்கமிடுமுக்கனலி தர்ப்பைசமமச்சகதை
சத்தியொடு வெட்டுநெடுவாட்
டைக்குமுடலிற்குருதி நெய்த்திரளதற்கவிது
சைக்குவை யிசைக்குமொலியே
யட்டமிடுவிப்ரகுல வித்தகர்மறைத்தொனிய
தற்குவவை பத்மனுடலே
யத்திறமிசைத்தபத முச்சகமுமிச்சகமு
மச்சகமு மெச்சவரிதாஞ்
சிட்டர்தொழுபத்மபத பத்தரிடர்வெட்டுருக
சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
சிறுபறைமுழக்கியருளே

(9) இலகுகருமுகிலிருந ரவர்கடொளிருமுழமொழி
யிடிமுரசு னலும்வடிவா
ளிகலுமொருதனுவளை கன் மகபதிதனிசியதனு
வெழுகணைகள் சொரியுமழையே
சலசலெனநதிபெருகு மலையருவியானைரு
றனின்மருவு குருதியதன்மேற்
றனின்முழுகுகழுகுகொடி யிணைமலைகைமுழுகவரு
சனமதனில் விழுதல்புகவே
கலகமிடுமறலிபடை யுழவரவர்மகிட்டுமுகி
கனபகடு கயிறுகயிறே
கழனிரணகளமகுட நடமுடியுவகைபெற்று
கடியசமர் புரியும்வினோர்
திலகனுதலருள்சிறுவ குமாரகுருபரமுருக
சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
சிறுபறை முழக்கியருளே.

வேறு.

(10) களையிட்ட குருதிக்குண் முழுகிக்குலவையிட்ட
களமுற்ற கடிபெற்றமா
கனமொத்தமுரசுக்கு ளுலையிட்டுவிணை யிட்ட
கறிவைத்து வெறிபெற்றபேய்
நிரையிட்டகுருதிக்குள் வரிசைப்பலரிசிக்கு
நிகரிட்ட ரியிலுற்றவாய்

நிலைபெற்றவிருதிட்டகொடியுற்றவிறகிட்டு
நிமிடத்தி லெரியிட்டுமால்
வணையிட்டகுருதிக்குள் வடியிட்டகுடமுற்று
மதுவிட்டு விசையத்துமான்
மணிபெற்றசரணத்தின் மலிவுற்றபலியிட்டு.
மகிழ்வுற்று லகமெய்க்கவே
திரையிட்டபுடவிக்குள் ளமரிட்டதிடசித்த
சிறுபறை முழக்கியருளே
தேவர்க்குமானுதவு தேவிக்குநாயகன்
சிறுபறை முழக்கியருளே.

சிறுபறைப்பருவம் முற்றும்.

---

## ௰. சிறுதேர்ப்பருவம்.

---

வேறு.

(1) பண்டேறுகந்தருவர் விண்ணவர்குழாமெலா
படையாக வடமேருவே
பாரவில்லாகவா சுகியுமேநாணைப்
பச்சைமால் கணையாகவே
முண்டேறுதேராக மறைநான்குபுரவியா
மலரயனும் வலவனாக

மதியமும்பருதியும் தேருருளையாகநம்
வாசவன் றெண்டனிடவே
கண்டேறுதேன்மொழிப் பச்சைப்பசுங்கொடி
கலந்திடப் பாகம்வளரக்
சருதுதிரிபுரசிருதர் நகையிலெழுசிகியெழக்
கண்டுகிர்த் தூளிபடவே
திண்டேருருட்டிவரு கையிலைநாயகன்மகன்
சிறுதேருருட்டியருளே
செங்கமலையாகலாத துங்கமலையாதிபதி
சிறுதேருருட்டியருளே.

(2) உருத்தேறுகிளைமுகன் றலைபணங்காயென்ன
வுதிரவாண் முகடுமட்டும்
உயர்கின்றசெய்குன்றி லுதவுமிளவிசையமக
ளுவகையொடு விளையாடவே
கருத்தேறுமாமணிப் பர்தெறிந்தேயலகை
கவிகொண்டு கூத்தாடவே
கழுதுக்குழாங்கூடி யிருகாலிலெற்றிக்
கழுங்கென் றுளங்குளிரவே
செருத்தமரினிசர ரிரிந்தோடநிலமங்கை
செங்குருதி யுண்டுதேக்கத்
வென்றிசைக்கடவுள்படை முன்பகைதடிந்திடத்
தேவர்கோன் வரவிடுத்த

திருத்தேர்நடத்திவரு செங்கண்மான்மகிழ்மருக
சிறுதே ருருட்டியருளே
செங்கமலையகலாத துங்கமலையாதிபதி
சிறுதேருருட்டியருளே.

(3) காரோருமுகிலெனக் கடகளிறுவீறிடக்
கரடமத மூன்றுபெருகக்
கடலுடைத்தாலென்ன நிரைநிரையதாகவே
கலினவாம் பரிநெருங்கப்
போரேறுமன்னவர்கள் வாய்மடித்தேகொடிய
புலிபோ லெதிர்த்துநிற்கப்
பொருதுமட்சோணிகண் மூவாறுமோரேழு
புணரியென வந்துசூழச்
சீரேறுமுரசகே தனன்வெகுளமறலியருள்
செல்வனு மகிழ்ந்துநிற்கச்
செங்கண்மா னளிட்டமூவாறிலேகுருச்
சேத்திரர்கள் களம்விளங்கத்
தேரோடுமரசர்கதை யெழுதுமிபமுகனிளவல்
சிறுதே ருருட்டியருளே
செங்கமலையகலாத துங்கமலையாதிபதி
சிறுதே ருருட்டியருளே.

(1) மன்றலந்தெரிவையர்கள் பரிவாரமேசூழ

# மயூரகிரிநாதர்.

மரவாரணகணங்கு விரவிநிலவென்று நிரு
மணிகணீ ரொளநடக்கத்
துன்றுமேழ்கடன்முரச மிகவார்ப்பரிக்கச
சுரும்பர்கள் கரும்புசேரச
சோலைக்கருங்குயில்கள் எக்காளமூதவிரு
ளாணியுமரும்பு நிறையக்
குன்றவில்லினையமூல வடதருவிலுறைபுமௌன
கோவான ஞானமுதலைக்
கோதிலாமறைதேடு மெய்ப்பொருளையுமையோடு
கூட்டுதற் கெளிதாகவே
தென்றலந்தேர்நடத் தியமாரன்மைத்துனன்
சிறுதே ருருட்டியருளே
செங்கமலைபகலாத துங்கமலையாதிபதி
சிறுதே ருருட்டியருளே.

(5) கனகமலைபளபளென வொளியைபகலாகிட
கங்குலு மறைந்துநிற்கக்
கமலாகரத்தினி லரும்புகள் சுரும்பொடு
களிக்கவே சக்ரவாகம்
அனவரதமுஞ்சோடு பிரியாமலின்பமுற
வந்தணர் கடன்கழிக்க
அருணனெடுபசுமைப் பசுங்குதிரைமேற்கசை
யடித்திடப் பரிநடக்கப்

பணகனுடல் குலையவொரு பாசமெனவே நின்ற
பாசமுந் தணியவுருளே
பரிகர்த்தனஞ்செய்ய வுயர்சகரவாளகிரி
பாரம் பரிக்கவானிற்
றினகரன்றேர்செல்ல விளையாடுமொருபிள்ளை
சிறுதே ருருட்டியருளே
செங்கமலையகலாத தங்கமலையாதிபதி
சிறுதே ருருட்டியருளே.

(6) மூவர்களு மிலைகொண் டிருக்கவிண்ணவர்கள்பொன்
முடியுமீன் சுமையுமாற
முனிவோர்சடாமுடி மதுக்குடர்தாங்கலு
மூலக்குட மிரண்டுதாங்கும்
பாவையர்கண்புமுடிக டண்ணீர்க்குடங்கொண்ட
பாரமற வாயுசிருதன்
பைம்பொனரண்மனைவாயின் முன்றிலிற்றாளுதறு
பாலங்க ரவருணன்
மேவுமரண்மனைதொறுஞ் சாணிநீர்தூற்றுவினை
மீண்டுவினை யகலவனலி
வேண்டுமொருதூண்டா விளக்கென்றதுயர்நீங்க
வீறுபொன் றுடைனருளாற்
றேவர்கோன்பொற்றேர் நடாத்தவருசிறுபிள்ளை
சிறுதே ருருட்டியருளே

செங்கமலையகலாத துங்கமலையாதிபதி
சிறுதே ருருட்டியருளே.

(7) ஞப்பத்சனங்கொண்ட விந்த்ராணிகடிகடக்
கோமளத் தேரோறவே
குலிசதரன்முனிவோர் மகம்பலவியற்றியே
கூறுபூந் தேரோறவே
கம்பக்கடகளிற் றரசர்போராடவே
கடவுபொற்றேரோறவே
காசினிவிளங்கவரு மாலயமெலாந்தேவர்
கற்பகத் தேரோறவே
வம்புற்றதனமாதர் தன்னெறிவழாமையான்
மண்டலத்தேரோறவே
மாதமும்மாரியும் வழங்கலாற்கடல்சூழும்
வையகத்தேரோறவே
செம்பொற்பெருந்தேரி லேறுமொருசிறுபிள்ளை
சிறுதே ருருட்டியருளே
செங்கமலையகலாத துங்கமலையாதிபதி
சிறுதே ருருட்டியருளே.

(8) ஒருநாலுவேதமும் விளங்குமறையோர்குலமு
மூவகத்திலே விளங்க
ஏப்பருடனும்பர்தோ மாறும்விளங்கமக
மோயாமலே விளங்க

வருநாடுகாவலன் சசிவர்ணமகராசன்
    மைந்தன் மிகவும்விளங்க
வாறுடுபோலவே நேமநாடெங்நாளு
    மகிழ்வாகவே விளங்கத்
தருநாவலோர்தமிழ் விளங்கவளர்குன்றை நகர்
    சந்ததமுமே விளங்கத்
தானமொடுபரிகலஞ் சந்திராதித்தர்வரை
    சந்ததிவிளங்க நிதமும்
திருநாள்விளங்கவொரு தேரோறிவருமுருக
    சிறுதேருருட்டியருளே
செங்கமலையகலாத துங்கமலையாதிபதி
    சிறுதே ருருட்டியருளே.

(11) தங்கமலைநிகரான துங்கமலைவாழ்கவே
    சரவணப் பொய்கைவாழ்க
சந்த்ரமண்டலமளவு மாயூரகிரிரசித
    சைலமென நிதமும்வாழ்க
மங்களம்பெருகுதே ஞறுவாறுறென்ன
    மாறாது பெருகிவாழ்க
மதுநதிசருமிலகு வாமபாகத்தில்வளர்
    மரகதக் கொடியும்வாழ்க

வெங்களபமுகன்முதற் றேவராபரிவார
மென்மேலு வாழ்கவுனது
விளைமலர்த்தாண்மீதிலன்புவைத்தவரெலாம்
வீறுபிறைபோலவாழ்க
திங்கண்மும்மாரியொடு சகதலம்வாழ்கவே
சிறுதே ருருட்டியருளே
செங்கமலையகலாத துங்கமலையாதிபதி
சிறுதே ருருட்டியருளே.

(10) பார்வாழிகுக்குடக் கொடிவாழிபச்சைப்
பசுந்தோகை வாழியுனது
பரிவாரகணம்வாழி நவவீரரும்வாழி
பரிவாகவோங்கும்வடிவேற்
கூர்வாழிவள்ளியங்கொடிவாழிவளர்தெய்வ
குஞ்சரி மடந்தைவாழி
கூறுபிள்ளைத்தமிழ்க் கவிவாழியரசர்செங்
கோல்வாழி யிலகுகுன்றை
யூர்வாழிதானமொடு பரிகலம்வாழிமறை
யோர்குல மிகுத்துவாழி
யுலகுபுகழ்மாயூர கிரிவாழிசந்நிதி
யுயர்ந்துமேன் மேலும்வாழி

சீர்காழியெழில்பெருகு குமரகுருபரமுருக
சிறுதேருருட்டியருளே
செங்கமலையகலாத தங்கமலையாதிபதி
சிறுதேருருட்டியருளே.

ஆகத்திருவிருத்தம் - ௱.

மயூரகிரிநாதர் பிள்ளைத்தமிழ் முற்றும்.



M. L. V. Press, Madura—500—24.